# மருவில்சீர் மருதமாமலை



ஆசிரியர் :

தமிழகக் கோயிற் கலைச் செல்வர்
தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்





திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
153/154 டி.டி.கே. சாலை, சென்னை-18
1987

கிளைகள் :

சென்னை-108.

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1

கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2, சேலம்-1

கழக வெளியீடு : கஅகடு

முதற்பதிப்பு : சூலை 1987

MARUVIL SEER MARUTHAMAMALAI

அப்பர் அச்சகம், சென்னை-108.

# பதிப்புரை

கோவை மாவட்டத் திருத்தலங்களுள் மருதமலை, முருகன் எழுந்தருளியிருக்கும் திருத்தலமாகும். இத்தலம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் புகழ் பரப்பி, முருகன் உறையும் ஆறுபடை வீடுகளுடன் ஏழாவது படைவீடாக வைத்தெண்ணத்தக்க சீர்சிறப்புகளைப் பெற்று வருகின்றது. இத்திருத்தலத்தின் மாண்பினைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வகையில் ''மனங்கவர் மருதமாமலை'' என்னுந் தலைப்பில் சின்னதொரு வெளியீடு வெளிவந்திருப்பதை அன்பர்கள் அறிவர்.

எனினும் வளர்ந்து வரும் மருதமலையின் சிறப்பினை நன்கு விளக்கும் வகையில் இன்னும் சற்று விரிவான நூல் வெளிவருதல் நலமாகும் எனப் பேரன்பர் பலர் விரும்பினர். அவ்விருப்பத்தினை நிறைவேற்றும் வகையில், தமிழகக் கோயிற் கலைச்செல்வர் திரு. தி. இராசமாணிக்கம் அவர்கள் ''மருவில் சீர் மருதமாமலை'' என்னும் இந்நூலினை எழுதித் தந்துள்ளார். முருகனடியார்கள், இந்நூலினை ஏற்றுப் போற்று முகத்தான் இத்தகைய நூல்கள் பல மேலும் வெளி வர ஆக்கமும் ஊக்கமும் அளிப்பார்கள் என எதிர்பார்க்கிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# உள்ளுறை

# மருவில் சீர் மருதமாமலை

## 1. சீர் சிறக்கும் மருதமலை

பழங்காலந் தொடங்கித் தமிழகம் சேர, சோழ, பாண்டிய நாடுகள் என்ற மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டு விளங்கியது. இவற்றுள் ஒரு பகுதி கொங்கு நாடு எனப் பட்டது. இதன் எல்லைகள் "கொங்குமண்டலசதகம்" என்ற நூலில்

"மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழனி மதிகுடக்குக்
கதித்துள வெள்ளி மலைபெரும் பாலை கவின்வடக்கு
விதித்துநான் கெல்லை சூழ்வன மற்று மேவு விண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு நீள்கொங்கு மண்டலமே"

எனக் கூறப்பட்டுள்ளன. அதாவது கிழக்கில் கோட்டைக் கரையும், மேற்கில் வெள்ளியங்கிரியும், வடக்கில் பெரும் பாலையும், தெற்கில் பழனியும் இதன் எல்லைகளாம். இக் காலத்தில் இது கோவை, பெரியார் மாவட்டங்கள், சேலம் மாவட்டத்தில் ஓமலூர், சேலம், திருச்செங்கோடு, நாமக்கல் வட்டங்கள், திருச்சி மாவட்டத்தில் கரூர்வட்டம், குளித்தலை வட்டத்தில் ஒருபகுதி, அண்ணா மாவட்டத்தில் திண்டுக்கல், பழனி வட்டங்களின் ஒரு பகுதி ஆகியவற்றைக் கொண்டது. மலைகள் மிகுதியாக உடைய இந்த நாட்டில் அவை காவல் வீரர்களைப்போன்று அரணாக அமைந்துள்ளன. மலையரண்களால் சூழப்பெற்று நடுவில் சமநிலமாக உள்ள இந்த நாடு மண் அகல் விளக்குப் போன்று காணப்படும்.

சைவர்களுக்குக் கோயில் என்றாலே இறைவன் அருட் கூத்து இயற்றும் தில்லையம் பதியைத் தான் குறிக்கும். இறைவன் நடனமாடும் சபையைப் பொன் வேய விரும்பிய

போது தங்கம் அனைத்தையும் கொடுத்த பேறு கொண்டது கொங்குநாடு. இதைக் 'கொங்கு மண்டலசதகம்'

''பற்று அறுத்து ஆளும் பரமன் ஆனந்தம் பயில் நடஞ் செய்
சிற்றம் பலத்தைப் பொன்னம் பலமாகச் செயச்செலும் பொன்
முற்றிலும் தன்னகத் தேவிளை வாவதை மொய்ம்பிறையுள்
மற்றும் புகழக் கொடுத்ததன் றோகொங்கு மண்டலமே''

எனச் சிறப்பிக்கிறது. சைவத்திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி தமது ''திருத் தொண்டர் திருவந்தாதி'' யில்,

'சிங்கத்து உருவனைச் செற்றவன் சிற்றம்பலமுகடு
கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன்'' (65)

என ஆதித்த சோழன் கொங்கு நாட்டுத் தங்கத்தைக் கொண்டு சிற்றம்பலத்தை வேய்ந்ததைக் குறிப்பிட்டுள்ளார். இவரைப் பின்பற்றி திருத்தொண்டர்புராணம் பாடிய பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவரான சேக்கிழார்பெருமான்,

'மன்னிய பொன்னம் பலத்து மணிமுகட்டிற்பாக் கொங்கிற்
பன்னு துலைப்பசும் பொன்னாற் பயில்பிழம் பாம்மிசை
யணிந்த
பொன்னெடுந்தோள் ஆதித்தன்'' (4111)

எனப் போற்றியுள்ளார். கொங்கு நாட்டின் சிறப்பை உலகு அறிய இது ஒன்றே போதும் அன்றோ !

கடையெழு வள்ளல்களில் தமிழ் மூதாட்டியாம் ஔவைக்கு நீண்டநாள் வாழ, நெல்லிக்கனி அளித்த அதியமான் நெடுமான் அஞ்சி ஆண்ட நாடு இது. மயிலுக்குத் தன் போர்வையை வழங்கிய ''கொடை மடம்'' உடைய ஆவியர் பெருமகன் பேகன் வாழ்ந்த நாடு இது; வில் லாண்மையில் தன்னிகரற்றமையால் வல்வில் ஓரி எனப் பெயர் பெற்ற வள்ளல் ஆட்சி செய்த நாடு இது; தமிழுக்குத் தன் தலையைக் கொடுக்க முன் வந்த முதிரமலைத்தலைவன்

குமணன் கோலோச்சிய நாடு இது. சங்ககால இலக்கியங்களில் இவர்களைப் பற்றிய செய்திகளைப் பரக்கக் காணலாம்.

''கொங்கு'' என்ற சொல்லுக்கு பூந்தாது, மணம், தேன், கள் என்று பல பொருள்கள் சொல்லப்படுகின்றன. கொங்கு நாட்டைச் சார்ந்த கொல்லி மலை போன்ற பகுதிகளில் தேன் பெரும் அளவில் கிடைப்பதால், ''கொங்கு நாடு'' என்று பெயர் பெற்று இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. 'கொங்கன்' என்ற மன்னன் ஆண்டமையால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம் என்று ஒரு கருத்தும் நிலவுகிறது. சமயம், வரலாறு ஆகியவற்றில் தனக்கென ஓர் இடம் அமைத்துக்கொண்ட கொங்கு நாடு தன் பெயருக்கு ஏற்பத் தன் புகழ் மணத்தை எங்கும் பரப்பிக் கமழா நிற்கிறது.

இந்த நாட்டின் சமநிலமாக உள்ள நடுப்பகுதியிலும் ஆங்காங்கு மலைகளும், குன்றுகளும் அழகுற அமைந்து காணப்படுகின்றன. பொன்மலை [கிணற்றுக் கடவு,] குருந்தமலை, தென்சேரிமலை, கதித்தமலை, ஓதிமலை, சிவன்மலை, வட்டமலை, ஊதி மலை, சென்னிமலை, திருச்செங்கோட்டுமலை ஆகியவற்றைக் குறிப்பிடலாம். மேலே குறிப்பிட்ட மலைகளிலும் குன்றுகளிலும் முருகப்பெருமான் எழுந்தருளியிருப்பது போன்று, மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியான மருதமலையிலும் அவன் கோயில் கொண்டுள்ளான்.

கொங்கு நாடு 24 பிரிவுகளைக் கொண்டது. அவற்றுள் ஒன்றான ஆறை நாட்டின் எல்லையாக மருதமலை உள்ளது. ஆறை நாடு என்பது தற்காலத்திய கோவை, அவினாசி வட்டங்களையும், பல்லடம் வட்டத்தின் ஒரு பகுதியையும் கொண்டது. தமிழகத்தின் தொழில் தலைநகரமான கோவை மாநகரத்தினின்றும் சுமார் 15கி. மீ. தொலைவில் இந்த மலை உள்ளது. இதற்குச் செல்லும் வழியில் அரசினர் வேளாண்மைப் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக் கழகம், பயிரியல் பூங்கா [Botanical garden] ஆகியவை

அமைந்துள்ளன. காலேஜ் புதூர், வடவள்ளி, கல்வீரம் பாளையம் ஆகிய ஊர்களைக் கடந்து மருதமலைக்குச் செல்ல வேண்டும். ஒரு காலத்தில் வனச நதி ஓடியது. அதனையும் தற்காலத்தில் ''யானைப் பள்ளம்'' என்ற பள்ளத்தையும் வழியில் கடக்க வேண்டும். தரைமட்டத்தி லிருந்தும் சுமார் 600 அடி உயரத்தில் உள்ள அழகிய சம வெளியில் திருக்கோயில் அமைந்துள்ளது. மருதமலை என்பது முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயில் உள்ள இடம் மட்டும் அன்று; இதைச்சுற்றியுள்ள பெரிய மலை முடிகளையும், குன்றுகளையும் கொண்டதாம். மருத மரங்கள் அடர்ந்த சோலை அதாவது மருதவனம் இருந்த காரணத்தால் இந்தமலை மருதமலை எனப்பெயர் பெற்றது. இம்மலையை மருதவரை, மருதமால் வரை, மருதவோங்கல், மருதக்குன்று, மருதவெற்பு, வேள்வரை, காமற்பிறங்கு மருதாசலம் எனப் பல பெயர்களால் பேரூர்ப்புராணம் குறிப்பிடுகிறது.

கச்சியப்பமுனிவர் தாம் பாடிய பேரூர்ப் புராணத்தில் அபயப்படலம் மற்றும் மருதவரைப்படலம் ஆகியவற்றில் மருதமலையைப் பற்றிக்குறிப்பிட்டுள்ளார். கொங்குநாட்டின் ஐந்துமலைகளில் இது ஒன்று என்று அவர் கூறியுள்ளார். ஏனைய 4 மலைகளாவன:— வெள்ளிமலை என்ற வெள்ளியங் கிரி; உமாதேவியார்மலை என்ற நீலிமலை; பிரமன்மலை என்ற ஐயாசாமிமலை; பெருமாள் முடி என்று வழங்கும் பெருமாள்மலை. பேரூர்ப் புராணத்தில் வெள்ளியங்கிரியைச் சிவபெருமானது திருவுருவமாகவும், நீலிமலையை அன்னையின் திருவுருவமாகவும், மருதமலையைக் குமரனது திருவுருவமாகவும் ஆக இம்மூன்றுமலைகளும் சோமாஸ்கந்த (சிவனுமை முருகு) வடிவில் அமைந்துள்ளதாகவும் போற்றிக் கூறியுள்ளார்.

இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த கச்சியப்ப முனிவர் தமது பேரூர்ப்புராணத்தில் மருதமலையின் இயற்கை வளத்தைத் தமது சொல்லாற்றலால் படிப்போர் கண்முன் விளங்குமாறு சித்திரித்துக் காட்டுகிறார். கோமுனி, பட்டி

முனி என்ற முனிவர் இருவர் நாடோறும் தொழும் பெருமையை உடையது இந்தமலை. தவம் செய்வோர்களும், அருளாளர்களும் இறப்பில்லாப் பெருவாழ்வு அடைய காயகல்பம் தேடி இங்கு வந்து தங்கினார்கள். காமதேனு என்ற தெய்வீகப்பசு இங்கு வந்து பசியாற மேய்ந்து மருத மரத்தின் அடியிலிருந்து ஊற்றெடுத்த தூயநீரைப்பருகியது.

"பக்தர் கோ முனி பட்டி முனிவனு
நித்த நித்த நிரந்தரத் துள்ளது
சித்தர் வானவர் திப்பிய மாதவர்
சுத்த யோகியர் சூழ்ந்த பரப்பது
.......... வைகலும் மவ்வரைச் சாரல்
உருத்திகழ் காமதேனு வுற்றுலாவி உறுபசி யிரிதரமேய்ந்து
மருத்திகழ் தீர்த்தம் பருகி நீள் சோலை மலர் நிழல் அயர்வு
யிர்ப்பதுவே"

என்பன அவருடைய திருவாக்குகளாம்.

இங்கு அரிய மூலிகைகளும் மரங்களும் இருந்தன. அவற்றின் காற்றுப்பட்டநீர், அமுது போன்று இருந்தது. அது உடற்பிணி, மலப்பிணி ஆகியவற்றை நீக்க வல்லதாக இருந்தது. இதனால் இது மருந்துமலை என்று சொல்லும் பெருமை உடையதாக இருந்தது. இந்நாளில் கூட சிறியா நங்கை, பெரியாநங்கை, அழுகணி, தொழுகணி, கல்பனை, கல்தாமரை ஆகிய அரிய மூலிகைகள் கிடைப்பதாகவும், அவை இங்குள்ள மலைச்சாதியினரான இருளர்களுக்குத் தெரியும் என்றும் சொல்லப்படுகிறது.

இரவில் மின்னலைப்போன்று ஒளிவீசும் சோதிமரங் களும், அடர்ந்த இருளில் பொன்னிறமாக ஒளிவிடும் சோதிப் புற்களும் செழித்து வளர்ந்து இருந்தன. நாகதாளியின் பழங்கள் பாம்பு படம்எடுப்பது போன்று நீண்டு இருப்பதைக் கண்டு பாம்பு என்று எண்ணி மயில்கள் அவற்றைக் கொத்தி ஏமாறும்.

"நாக நீண்முழை நாகங்கண் டச்சுற
நாக தாளியி னன்கனி பாம்பெனத்

தோகை மஞ்ஞை தொடர்ந்து முன்கொத்தி நின்று
ஊக மோட வுலைக்குமோர் பாலெலாம்''

என்று கச்சியப்பமுனிவர் குறிப்பிட்டுள்ளார். எருமை என்ற ஒரு வகை மரங்களின் ஒலியைக் கேட்டு, எருமை என எண்ணி வேங்கைப்புலிகள் கோபங் கொள்ளும், நிழல் அற்ற நீண்ட மரங்களும், யானை, குதிரை போன்ற மரங்களும், காய், கனி திருடும் கள்வர்களைப் பாம்பு போற் சீறி உயிர் வாங்கும் பழியுடைய மரங்களும், நாய்க்குட்டிகள் போன்று காய் காய்க்கும் மரங்களும் இந்த மலையில் காணப்பட்டன. மேலும் அடர்ந்து செறிந்து நீண்ட கரிய மயிர்களை உடைய கரடிகளும், மிரண்ட பார்வையுடன் புல்லுண்ணும் வாயை யுடைய மான்களும் இந்த மலையில் திரிந்தன. ''மகண்மா'' என்ற ஒரு வகை விலங்கு பெண்போன்று தோற்றம் அளிக்கும்; அதனால் அதனைத் தொலைவில் காணும் வேடர்தம் குலப் பெண் என எண்ணி அருகில் செல்ல, அது விலங்காக இருக்க, அப்பால் சென்று விடுவர்.

இவ்வாறு கச்சியப்பமுனிவர் காலத்துச் செழித்து வளர்ந் திருந்த பல அரிய மூலிகைகளும் மரங்களும் இந்நாளில் அருகி விட்டன, கால தேவனின் சீற்றம் என்றே கூறலாம். பல ஆண்டுகளுக்கு முன்பு பெரு மழையால் ஏற்பட்ட பெரு வெள்ளத்தால் மேற்கே உள்ள பெரிய பாறை ஒன்று உருண்டு வந்தது. அது கோயில் மீது விழுந்திருந்தால் கோயிலே அழிந்து போய் இருக்கும். இறையருளால் அதே சமயத்தில் வடக்கிலிருந்து உருண்டுவந்த மற்றொரு பாறையால் அது தடுக்கப்பட்டு,வந்த வழி மாறி,உருண்டு சென்றதால், தலமர மான மருதமரம் மட்டும் அழிந்துவிட்டது. இவ்வாறு கோயில் அழிவினின்றும் தப்பியது இறையருள் அன்றி வேறில்லை. இயற்கையின் சீற்றத்தை உணர்த்த இது ஒன்றே போதும். இயற்கையின் இத்தகைய விளையாடல்களால் மருத மலையின் இயற்கைவளம் அழிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

1008 அண்டங்களையும் 108 யுகங்கள் ஆள, இறைவனிடம் பெருவரம் பெற்ற சூரபன்மன் தன் தம்பியர்களான சிங்க

முகன், தாரகன் என்பவர்களின் துணையுடன், அமரர்களுக்குச் சொல்லொணாக் கொடுமைகளைச் செய்தான். கொடுமைக்கு ஆற்றாத இமையோர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். சூரபன்மன் முதலியோரைக் கொல்ல, குமரன் தோன்றும் வரை, ஆதிபுரி எனப்பெறும் பேரூரில் இருக்குமாறு இறைவன் அவர்களுக்கு ஆணையிட்டான். மருதமலை அங்கே உள்ளது எனக் கூறிய சிவபெருமான்,

''முருகன் என்னு மொய்கொண் மொய்ம்பினான்
உருகும் அன்பர்க் குதவி செய்யவே
பெருத காமர்ப் பிறங்க லாயினான்
அருகின் வேலு மருத மாயதே''

என்று அதன் சிறப்பைத்திருவாய் மலர்ந்தருளினார். அதாவது தன்னிடம் கொண்ட பேரன்பினால் கசிந்து உருகும் அன்பர்களுக்கு அருளுவதற்கு முருகன் மருதமலையாயினான். அவனது வேற்படை தலமரமான மருதமர மாயது என்பதாம். இறைவன் ஆணைப்படி இமையோர்கள் திருப்பேரூரில் அவனை வணங்கியபின், மருதமலையில் முருகப்பெருமானை நோக்கித்தவம் புரிந்தனர். அவர்களது தவத்திற்கு இரங்கிக் காட்சி அளித்த முருகப்பிரானிடம் அவர்கள் சூரபன்மன் முதலியோரால் ஏற்பட்ட தொல்லைகளைக் கூறி, அவற்றை நீக்கி யருளுமாறு வேண்டினர். அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கிய வேற்படை விமலன், சூரபன்மன் முதலியோரை அழித்து, அமரர்களுக்கு அவர்கள் இழந்த பதவிகளைப் பெற்றுத்தந்தான். அதன்பின் மீளவும் மருதமலையில் எழுந்தருளி அன்பர்களுக்கு அருள் பாலித்து வருகின்றான்.

மருதமலையே மாமயிலோன் திருவுரு என்று இறைவனே கூறியுள்ளான் என்றால் இதன் சிறப்பை என்னவென்பது!

---

## 2. பெருமைமிகு தீர்த்தங்கள்

சிறப்பு மிக்க இந்தத்தலத்தில் இறையன்பர்கள் நல் வாழ்வு பெறத்தீர்த்தங்கள் பலஉள்ளன. அவற்றில்ஒன்று மருத தீர்த்தம். இது தலமரமான மருதமரத்தின் வேரினின்றும் ஊற்றெடுத்துப் பெருக்கெடுத்தது. மருதம் பச்சிலை மூலிகை களில் மிகவும் சிறந்தது. இதன் இலை மிகவும் குளிர்ச்சி யுடையது. பச்சிலையை அரைத்துத் தலையில் தேய்த்து மூழ்கினால், நரம்பும் மூளையும் உறுதியும் குளிர்ச்சியும் பெறு கின்றன. முருகனது படைக்கலமான வேல்தான் தலமரமான மருதம் எனப் பேரூர்ப்புராணம் போற்றுகிறது. இதன் பெருமையைக் கச்சியப்ப முனிவர்,

"கால வங்கிக் கடவுள் வேணியிற்
சால வைகும் தண் புனல் நதி
ஞாலம் விண்டு நண்ணும் வேர்வழி
மூலம் வந்து முன்னு கின்றதே."

"அத்தகுதீர்த்த வரவினைக் கேட்டோர்
அணிவளர் நம்முலகு உறுவர்
அத்தகுதீர்த்தங் கண்ணுறக் கண்டோர்
அழகியநமது அரு கிருப்பர்
அத்தகுதீர்த்தம் படிந்தவர் நந்தம்
அழிவிலாத் திருவுரு வெந்ப்பர்
அத்தகுதீர்த்தம் பருகினோர் நந்தம்
அடியிணை நீழல் விட்டகலரர்."

"மண்ணைக்கோட் பட்டோர் மண்ணையி னகல்வர்
மகவிலார் மகவினைப் பெறுவர்
கண்ணொளி யிகந்தார் கண்ணொளி படைப்பர்
கவினிலார் கவினுருத் திகழ்வர்
பெண்ணல மிழந்தார் பெண்ணல முறுவர்
பிணியுளார் பிணியில ராவர்
எண்ணிய வரங்கள் எண்ணியாங் கடைவர்
எனைவரும் அனையதீர்த் தத்தால்"

என விரிக்கிறார். அதாவது சிவபெருமானது செஞ்சடையில் உள்ள கங்கைதான் மருதத்தீர்த்தமாக ஓடுகிறது. இதன்பெயரைக் கேட்டவர்கள் சிவலோகத்தை அதாவது சாலோகத்தை அடைவார்கள். நேரில் இதைக்கண்டவர் இறைவனுக்கு அருகில் அதாவது சாமீபத்தை அடைவார்கள்; இதில் நீராடியவர்கள் இறைவனது திருவுருவத்தை அதாவது சாரூபத்தை அடைவார்கள்; இதைக் குடித்தவர்கள் அவனது திருவடிகளை அதாவது சாயுச்சியத்தைப் பெறுவார்கள். மேலும் பூமி, மகவு, கண்ணொளி, அழகு, திருமணம் என்பவற்றைத் தாங்கள் வேண்டியாங்கு அடைவார்கள். இதுவுமன்றி, நோயுற்றார் தம்பிணி நீங்கி உடல் நலம் பெறுவர் என்பதாம். மருதம் என்றால் வடமொழியில் அர்ச்சுனம் எனப்படுவதால், இது அர்ச்சுனதீர்த்தம் என்றும் அழைக்கப் பெறுகிறது.

திருக்கோயிலுக்கு நேர் மேற்கில் $1\frac{1}{2}$ கி. மீ. தொலைவில் உள்ள சுனை 'புற்றுக்கண்சுனை' என்றும் 'புற்றுச் சுனை' என்றும் கூறப்படுகிறது. இது 'சரவணப் பொய்கை' என்றும் அழைக்கப்படுகிறது. குழாய்கள் அமைப்பதற்கு முன் இங்கிருந்து பச்சை மூங்கிலில் நீர் கொண்டு வந்து மருதமலையானுக்கு அபிடேகம் செய்யப்பட்டு வந்தது. இக்காலத்தில் இங்கிருந்து இரு குழாய்கள் மூலம் நீர் திருக்கோயிலுக்குக் கொண்டுவரப்பட்டு மருதமலை இறைவனுக்கு அபிடேகம் செய்யப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. முடிகாணிக்கை செலுத்தும் இடத்திற்கும் இந்தத்தீர்த்தம் கொண்டுவரப்பட்டு, முடிகாணிக்கை செலுத்தும் அன்பர்கள் நீராடவும் வசதி செய்யப்பட்டுள்ளது.

திருக்கோயிலிலிருந்து பாம்பாட்டி சித்தர் சமாதிக்குச் செல்லும் வழியில் சற்றுத்தள்ளி ஏழு கன்னியர் உருவங்கள் காணப்படுகின்றன. இங்குள்ள சுனை கன்னிகை தீர்த்தம் எனப்படுகிறது. இக்காலத்தில் இங்கு நீர் இல்லை. இருளர்கள் பயிர் செய்யும் பள்ளத்தாக்கில் பாம்பாட்டிச் சுனை உள்ளது. குடைபோன்று இயற்கையாக அமைந்த பாறைக்குக் கீழ் வெடிப்புகள் வழியாக நீர் வழிந்து ஓரிடத்தில் தேங்கியுள்ளது. இங்குச் சிறிதளவு நீர்தான் உள்ளது.

இடும்பன் கோயிலுக்குத் தென்திசையில் சிறிது தொலைவில் வக்கணூற்று அதாவது வற்றாப்பொய்கை உள்ளது. சரியானவழி கிடையாது. பங்குனி, சித்திரை ஆகிய கோடைகாலத்திலும் இதில் நீர்வற்றாக் காரணத்தால், இது வற்றாப்பொய்கை என்றுஅழைக்கப்பட்டது. இதற்குச் செல்லும் வழி குறுகலாகவும், சரியில்லாமலும் இருப்பதால், மக்கள் இங்குச் செல்வதில்லை.

திருக்கோயிலுக்கு வடமேற்கே 2 கி. மீ. தொலைவில் அநுமதீர்த்தம் உள்ளது. இதற்குச் சற்று உயரத்தில் உள்ள குகையில் அநுமக்குமார் என்ற மூர்த்தி அருவுருவமாக வணங்கப்படுகிறான்.

---

## 3. மருதமலையான் மாண்பு

குன்று தோறும் குடிகொண்டு அருளும் குமரக்கடவுள் சீர் மல்கு மருதமலையில் நின்ற திருக்கோலத்தில் ஞான தண்டாயுதபாணியாக எழுந்தருளியுள்ளான். இவனது பெருமைகளைப் பொது, சிறப்பு என இருவகைப் பிரிவுகளாக வகுத்துக் கூறலாம்.

மன்றாடி மைந்தனுக்கு உள்ள பொது சிறப்புகளை விரித்துக்கூறின் அது ஒரு பெரிய நூலாகப் பெருகும். அவற்றை விரிவாகப் படிக்க விரும்பும் அன்பர்கள் இந்த நூலாசிரியரால் எழுதப்பட்டு, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தால் வெளியிடப்பட்ட "தமிழர்தம் தனிப்பெருங்கடவுள்" மற்றும் "ஆறுமாமுகனின் அரிய திருவுருவங்கள்" என்ற நூல்களைப் படிக்குமாறு கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள். அவற்றை இங்குச் சுருக்கமாகக் காண்போம்;

பண்டைத்தமிழர்கள் நிலத்தை 4 பிரிவுகளாக வகுத்தனர். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி எனப்

பட்டது. அதற்கு உரிய கடவுளாக உமை மைந்தனைக் கொண்டனர்.

'சேயோன் மேய மைவரை உலகமும்' என்பது பழந்தமிழ் நூலாகிய தொல்காப்பியம்,

பண்டைத்தமிழர்கள் வாழ்க்கையை அகம், புறம் எனக் கொண்டனர். புறத்திற்கு அடிப்படை வீரம். வீரத்தைப் பெரிதும் போற்றிய தமிழர்கள் வானவர்களின் தானைத் தலைவனான முருகப்பெருமானை வீரத்தின் திருவுருவாகப் போற்றித் தொழுதனர். அகவாழ்க்கையைக் களவியல், கற்பியல் எனஇருபிரிவுகளாகக் கொண்டனர். களவியல் பண்பினைத் தமிழர்கள் பெரிதும் பாராட்டியமைக்கு சங்ககால இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. எனவே அவர்கள் குமரன் வள்ளியுடன் கொண்ட களவியல் தொடர்பைப் பெரிதும் போற்றினர். தங்களது இன்னல்களைக் களைய வேண்டிய காலத்தும், தங்கள் விருப்பங்களை நிறைவேற்ற வேண்டியகாலத்தும் அவர்கள் ஆறுமாமுகனின் அருளை எதிர்நோக்கினார்கள். இவ்வாறு முருகப்பெருமான் தமிழர் தம் வாழ்வில் இரண்டறக் கலந்து நின்றான்.

சங்ககாலத்தில் பெரிதும் வணங்கப்பட்ட இந்திரன், பலதேவன் ஆகியோரின் வழிபாடு மறைந்துவிட்டது. ஆனால் கந்தன் சங்ககாலந்தொட்டு, தமிழர்களால் தொழப்பட்டு வருகிறான். மேலும் இந்திய நாட்டின் பொற்காலம் எனப் பெறும் குப்தர்கள் ஆட்சிக்காலத்தில் கார்த்திகேயன் தலைசிறந்த கடவுளாக வணங்கப்பட்டான் என்பர் திருமிகு. வி. எஸ். அகர்வால். ஆனால் நாளடைவில் தமிழகம் நீங்கலாக இந்திய நாட்டின் ஏனைய பகுதிகளில் முருகனது வழிபாடு தனது சிறப்பினை இழந்துவிட்டது.

தமிழ் முனி எனப்படும் அகத்திய முனிவனுக்கு முருகன் தமிழ் ஆசான் எனக் கருதப்படுகிறான். தந்தையாகிய சிவபெருமான் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தருமிக்காக நின்று நக்கீரனாருடன் சொற்போர் நிகழ்த்தினார். அதே தமிழ்ச் சங்கத்தில் முருகன் உருத்திரசன்மன் என்ற பெயரில்

அமர்ந்து இருந்து 'இறையனார் அகப்பொருள்' என்ற நூலுக்குச் சங்கப்புலவர்களின் உரைகளைக் கேட்டு, எது சிறந்தது என அறுதியிட்டுக் கூறினான். இம்மட்டோ! "நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன்" குமரனின் அவதாரமாகப் போற்றப்பட்டான். இறைவனிடம் காதல் கொண்டு கசிந்து உருகிக்கண்ணீர் மல்கினால்தான், அவனது அருளைப் பெறலாம் என்பர். ஆனால் முருகனை முத்தமிழால் திட்டினால்கூட, அவனது அருளை அடையலாம் என்பர். அருணகிரிநாதர்

"முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்"

[கந். அல. 22]

என்பது அவரது அருள்வாக்கு. இவற்றினின்றும் முருகனிடம் தமிழர்கள் கொண்ட பேரன்பினை உய்த்து உணரலாம்.

முருகனுடைய பன்னிரு கைகளும் பன்னிரண்டு உயிர் எழுத்துகள். அவனுடைய பதினெட்டுக் கண்களும் பதினெட்டு மெய்எழுத்துகள். அவன் ஆறு தலைகளும் வல்லினம், இடையினம், மெல்லினம் என மூன்று பிரிவில் உள்ள ஆறு எழுத்துகளாம். அவனது வேற்படை ஆய்த எழுத்தாம். 'முருகு' என்ற சொல்லில் 'மு' மெல்லினம், 'ரு' இடையினம், 'கு' வல்லினம் என, முருகன் தமிழ்க்கடவுள் என்பதற்கு விளக்கங்கள் தரப்பெறுகின்றன. 'தமிழ்' என்ற சொல்லிலும் 'த' வல்லினம், 'மி' மெல்லினம், 'ழ்' இடையினம் என்று மூன்று இனங்களும் அமைந்துள்ளன. இது காறும் கூறியவற்றினின்றும் முருகன் தமிழர்தம் தனிப் பெருங்கடவுள் என்பதைத் தெளிவாகத் தெரியலாம்.

இனி முருகனது திருவுருவிற்கு அளிக்கப்படும் பல விளக்கங்களைச் சுருக்கமாகக் காணலாம்.

'முருகு' என்ற தமிழ்ச்சொல்லுக்கு இளமை, மணம், அழகு, கடவுள் தன்மை எனப் பொருள் கொள்ளப்படுகிறது. முருகப்பெருமான் இளையோன் என்பதற்கு ஏற்ப இலக்கியங்கள் அவனைச் "சேய்" என்று குறிப்பிடுகின்றன. இவனது

திருவுருவப்பொலிவினை இவனுடைய தலைசிறந்த அன்பரான அருணகிரிநாதர் தமது கந்தர் அலங்காரத்தில் :

''மாலோன் மருகனை மன்றாடி
மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோ டனைச்
சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத் திலனே
அந்த நான்முகனே'' (90)

என்று அருளியுள்ளார். வானவர்களின் தலைவன் ஞானத்தின் திருவுரு எனப்பெறும் முருகப்பெருமானது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அழகை அள்ளி அள்ளிப் பருக நாலாயிரங் கண்களையாவது அந்தப்பிரமன் படைத் திலனே என இரங்குகிறார். கந்தவேளுக்குப் பரம எதிரியான சூரபன்மன் :

''ஆயிர கோடி காமர் அழகெல்லாம் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக்கு ஆற்றாது என்றிடில் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார் ?
அண்ணலார் குமரன் மேனி அடிமுதன் முடியின்காறும்
எண்ணிலா ஊழி காலம் எத்திறம் நோக்கி னாலும்
கண்ணினால் அடங்காது உன்னில் கருத்தினால் அடங்காது''
[கந். புராணம் 4-13-439-441]

என முருகனது ஒப்பதும் மிக்கதும்அற்றஅழகினை வலியுறுத்துகிறான். அதாவது மாரன் அழகுக்கடவுள். ஒன்றல்ல ; இரண்டல்ல; ஆயிரங் கோடி காமர்களின் அழகு எல்லாம் ஒன்றாகத் திரண்டாலும் சேவற் கொடியோனின் சேவடிக்கு இணையாகாது என்றால், அவனது வானுற நிமிர்ந்துவிளங்கும்அழகுக்கு உவமை கூறல் இயலுமோ ? அழகின் உறைவிடமாம் உமை மைந்தனது திருவுருவை அடிமுதல் முடி வரை எண்ணற்ற ஊழிகாலம் எவ்வளவு முறை பார்த்தாலும் அத்தெய்வீகத்

திருவுருவின் முழு வடிவைக் கண்களால் காண இயலாது; எண்ணிப் பார்க்கவும் முடியாது என்பதாம். காப்பியத் தலைவர்களை அழகில் முருகப் பெருமானுடன் ஒப்பிடுவது இலக்கியமரபாகும்.

வள்ளி மணவாளன் தெய்வீகமணம் கொண்டவன் என்பதை நக்கீரனார் தமது திருமுருகாற்றுப் படையில்,

''மணங்கமழ் தெய்வத்து இளநலம்'' [வரி 290]

என்பர்.

முருகப் பெருமானது ஆறுமுகங்களையும் பகுத்தறிவு உள்ளிட்ட ஆறு அறிவுகளாகக் கொண்டால், தமிழ் இலக்கிய மரபுப்படி, அவனை அறிவின் திருவுரு என்னலாம். அதாவது அவன் யாவையும் உணர்ந்தவன் என்பதாகிறது. ஆங்கிலத்தில் இறைவனது இப்பண்பினை 'Omniscent' என்பர். ஆறுமுகங்களில் ஐந்து முகங்களை மண், காற்று, நீர், தீ, ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்களாகவும், ஆறாவது முகத்தை அவற்றை இயக்கும் பகுத்தறிவாகவும் கொள்ள லாம். ஐம்பெரும் பூதங்களின்றி இவ்வுலகில் எப்பொருளும் இல்லை. எனவே ஐந்து முகங்களும் ஐம்பெரும் பூதங்களாகக் கொள்ளப்படுவதால், அவன் உலகமெங்கும் நீக்கமற நிறைந் துள்ளான் என்பது பொருளாகிறது. இதை ஆங்கிலத்தில் Omnipresent' என்பர். மனிதன் தன் பகுத்தறிவால் ஐம்பெரும் பூதங்களை ஓரளவு ஆக்கும் பணிக்கும் அழிக்கும் பணிக்கும் பயன்படுத்துகிறான். எனவே முருகப் பெருமானது ஆறாவது முகம் பகுத்தறிவு. எனப்படுவதால், அவனை உலகை இயக் கும் மாபெரும் சக்தியாகக் கொள்ளலாம். இதை ஆங்கிலத் தில் 'Omnipotent' என்பர். இவ்வாறு முருகனது திருவுரு இறைவனது முத்திறப் பண்புகளையும் உணர்த்துகிறது.

ஆறு முகங்கள் சிவபெருமானது வாமதேவம், தத் புருடம், ஈசானம், அகோரம் மற்றும் சத்யோ ஜாதம் என்ற ஐந்து முகங்களையும், பராசக்தியின் கீழ் நோக்கிய அதோ முகத்தையும் குறிப்பதால், இவன் சிவசக்தி வடிவமாகப்

போற்றப்படுகிறான். மேலும் முற்றறிவு, வரம்பில் இன்ப முடைமை, இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், முடிவில் ஆற்றலுடைமை, பேரருளுடைமை, தம்வயமுடைமை என்ற ஆறு குணங்களையும் குறிப்பதாகக் கொள்ளப் படுகிறது.

முருகப்பெருமான் வானவர் தானைத்தலைவன், எனவே அவன் பேராற்றல் மிக்கவன். இதை உணர்த்தவே அவனுக்குப் பன்னிரண்டு கைகள் அமைந்துள்ளன. இவனுக்கு உகந்தது கடம்பம் பூ. இதனால் இவன் கடம்பன் என்று அழைக்கப் பெறுகிறான். கடம்பம் கார் காலத்து மலரும் தன்மையது. அதை மாலையாக அணிந்து அவன் கடம்ப மரத்தில் உறைவது அவனது அருள் திறத்தைச் சுட்டிக் காட்டுகிறது. அவனது கொடியான சேவல் நாத தத்துவத்தையும் (ஒலி), ஊர்தியான மயில் விந்துதத்துவத்தையும் (ஒளி) உணர்த்து கிறது. அழகு மிக்க முருகப் பெருமானுக்கு அழகில் சிறந்த மயில் ஊர்தியாக அமைந்துள்ளது சாலப் பொருத்தமே. மயிலின் வாயில் பாம்பு காணப்படுகிறது. பாம்பு சக்தியைக் குறிக்கிறது. அது மயிலுக்கு அடங்கியுள்ளது. மயில் வேற் படையோனுக்கு அடக்கம். எனவே, எல்லா சக்திகளும் கந்தவேளுக்கு அடக்கம் என்பதாகிறது.

குன்றம் கொன்றானின் படைக்கலமான வேற்படையை "எப்படைக்கும் நாயகமாவது" என்பர் கச்சியப்ப சிவாசாரி யார் தமது கந்தபுராணத்தில். வேலின் நுனி கூர்மையாகவும், நடுப்பகுதி அகலமாகவும், கடைசிப் பகுதி ஆழமாகவும் உள்ளன. அது போன்று அறிவு யாவற்றையும் விரைவில் புரியும் வகையில் நுண்ணியதாகவும், பல பொருள்களை அறிந்து பரந்தும் உள்ளது. பொருள்களை மேலெழுந்த வாரி யாக நோக்காது ஆழ்ந்து நோக்க வேண்டும். இறைவனது மூன்று சக்திகளில் இது ஞான சக்தியாம்; வள்ளியம்மை இச்சா சக்தியாகவும், தெய்வயானை அன்னை கிரியா சக்தி யாகவும் கொள்ளப்படுகிறார்கள்.

முருகப்பெருமானுடைய பல்வேறு திருவுருவங்களும் அவற்றிற்கான விதிகளும் ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன. அவற்றைச் சுருக்கமாகக் கூறுவோம்.

''குமாரதந்திரம்'' என்ற நூலில் பதினாறு திருவுருவங்கள் கூறப்பட்டுள்ளன:—

1. சக்திதரன்: ஒரு தலை இரண்டு கைகள் கொண்டது. இடக் கையில் சக்தி என்ற படைக்கலம் இருக்கும்.

2. கந்தன்; ஒரு தலை இரண்டு கைகளை உடைய இந்தவடிவம் கோவணம் அணிந்து இருக்கும்.

3. சேனாபதி; ஆறு தலைகள் பன்னிரண்டு கைகள் கொண்டது. மடியில் தேவி உட்கார்ந்து இருப்பாள்.

4. சுப்ரமணியன்: 2 கைகள் அல்லது 4 கைகள் கொண்டவன். ஒரு கையில் தாமரை மலர் இருக்கும்.

5. கஜவாகனன்: ஒரு தலை, 4 கைகளுடன் யானை மீது அமர்ந்து காணப்படும்.

6. சரவணபவன்: ஆறு தலைகள் பன்னிரண்டு கைகள் கொண்டவன்.

7. கார்த்திகேயனுக்கு: ஆறு தலைகள் ஆறு கைகள் இருக்கும்.

8. குமரன்: நான்கு கைகளை உடையவன்

9. சண்முகன்: ஆறு தலைகள், பன்னிரண்டு கைகளுடன் மயில் மீது உட்கார்ந்துள்ள திருவுரு.

10. தாரகாரி: என்ற வடிவிற்குப் பன்னிரண்டு கைகள் இருக்கும்.

11. கிரவுஞ்சபேதனன்: ஆறு தலைகள் எட்டு கைகள் உள்ள திருவுரு.

12. சேனானிக்குப்பன்னிரண்டுகைகள்இருக்க வேண்டும்.

13. பிரமசாத்தா வடிவம் நான்கு கைகளை உடையது. அதன்பின் கைகளில் அக்கமாலையும், கமண்டலமும் இருக்க வேண்டும்.

14. சிகிவாகனன்: ஒரு தலை நான்கு கைகளுடன் மயில் மேல் இருப்பான்.

15. பாலசுவாமி என்பது குழந்தை வடிவம்; தாய்தந்தையருக்கு இடையில் இருப்பது, சிவனுமை முருகு திருவுரு, [சோமாஸ் கந்த வடிவம்]

16, வள்ளி கல்யாண சுந்தரவடிவம்: வள்ளியம்மையைத் திருமணம் புரியும் திருவுரு.

''ஸ்ரீதத்வநிதி'' என்ற நூலில் மேலும் ஆறு வடிவங்கள் கூறப்பட்டுள்ளன.

1. அக்னிஜாத சுப்ரமணியன்: இரு தலைகள் எட்டுக் கைகள் கொண்டவன்

2. சௌரபேய சுப்ரமணியனுக்கு நான்கு தலைகள் எட்டுக் கைகள் அமைந்து இருக்கும்.

3. காங்கேய சுப்ரமணியன்: ஒரு தலை நான்கு கைகளுடன் மகர மீன் மீது நின்றுகொண்டிருப்பான்.

4. குகசுப்ரமணியன்: ஒரு தலை நான்கு கைகளுடன் தேவியுடன் காணப்படுவான்.

5. பிரமச்சாரி சுப்ரமணியனுக்கு உச்சந் தலையில் குடுமியும் இடுப்பில் புல்லாலான ஆடையும், கோவணமும் இருக்க வேண்டும்.

6. தேசிக சுப்ரமணியன்: ஒரு தலை ஆறு கைகளுடன் மயில் மீது அமர்ந்து தந்தைக்கு ஓங்காரப் பொருளைக் கூறும் வடிவமாம்.

ஆயிரம் பேருடைய பெம்மானான ஆறுமா முகனின் சில பெயர்களும், அவற்றின் சிறப்புகளும் காரணங்களும் :—

கந்தன் : வட மொழியில் மாற்றோர் வலிமையை வற்றச் செய்பவன் என்று பொருள் சொல்லப்படுகிறது.

தமிழில் கூறப்படும் பல பொருள்களாவன:—

சரவணப் பொய்கையில் இருந்த ஆறு குழந்தைகளையும் அன்னை பராசக்தியால் ஒருருவாக்கப் பெற்றவன்:

"அந்த மில்லதோர் மூவிரு வடிவும்ஒன் றாகிக்
கந்தன் என்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்"

[1-13-21]

கந்து என்பது யானையைக் கட்டும் தூண். அது ஓர் இடத்தில் இருக்காது. தேவையான இடத்திற்குக் கொண்டு செல்லலாம். அதில் யானையைக் கட்டுவார்கள். எனவே கந்தன் என்றால் தூணைப் போன்று பற்று அற்றவன். தூண் யானைக்குப் பற்றுக் கோடாக இருப்பது போல அவன் ஆருயிர்களுக்குப் பற்றுக் கோடாக உள்ளவன்.

கந்து என்றால் நடுவில் இருப்பது. எனவே கந்தன் என்றால், இறைவனுக்கும் இறைவிக்கும் நடுவில் இருப்பவன் என்றும் பொருள் சொல்லப்படுகிறது.

மேலும் மணங்கமழும் திருமேனியை உடையவன்; கந்தில் உறைபவன்; கடவுளர் ஆற்றல் எல்லாம் ஒருங்கே கொண்டவன் என்றெல்லாம் பொருள்கள் சொல்லப்படுகின்றன.

குருநாதன்: அகத்தியன், சிவபெருமான், நாரதன், தசரத ராமன் ஆகியோருக்கு ஆசான்.

சிலம்பன்: சிலம்பு - அதாவது மலையைத் தன் உறைவிடமாகக் கொண்டவன். சிலம்பு என்ற அணியைத் தன் காலில் அணிந்தவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

பாவகி: தீ வடிவினன்.

குமரன்: கு- குற்சிதம்; அருவருப்பு, மலம். மாரன் மரிக்கச் செய்பவன்; அழிக்கச் செய்பவன் எனவே குமரன் என்றால் ஆன்மாக்களின் மலத்தை அழிப்பவன் என்று பொருள்.

சிவபெருமான் தன் நெற்றிக்கண்ணால் மாரனை அழித்தான். அதே நெற்றிக்கண்ணில் தோன்றியவன் என்றும் பொருள் சொல்லப்படுகிறது.

குகன்: அடியார்களின் இருதயமாகிய குகையில் எழுந்தருளியிருப்பவன்.

விசாகன்: வி என்றால் பறவை. அதாவது இங்கு மயில்; சாகன் என்றால் திரிபவன். விசாகன் என்றால் மயிலின் மீது உலகெங்கும் திரிபவன்.

சுப்ரமணியன்: சு என்பது விசேடப்பொருளை உணர்த்துவது; பிரமணியன், அந்தணர்களுக்கும், மறைகளுக்கும் முதன்மையான கடவுள்.

சு. சுகம் ஆனந்தம்; பிரம்ம சிவபரம்பொருள்; ந்யம் [ண்யம்]. அதினின்றும் தோன்றி ஒளிர்வது. அதாவது ஆனந்த மயமாகிய சிவபரம் பொருளினின்றும் தோன்றி, அதினின்றும் வேறல்லாது திகழ்வது.

சரவணபவன்: ச. மங்களம்; ர. ஒளி, கொடை; வ: சாத்வீகம்; ந: போர்; பவன், தோன்றியவன். மங்களம், ஒளி, சாத்வீகம், வீரம் ஆகிய உயர்ந்த பண்புகளுடன் தோன்றியவன்.

சிவனையும் திருமாலையும் குறிக்கும். எனவே, சரவணபவன் சிவன் திருமால் ஆகிய இருவரின் பண்புகளைக் கொண்டவன்.

சரம்: நாணல்; வநம்; நீர்! நாணல் சூழ்ந்த பொய்கையில் தோன்றியவன்;

கார்த்திகேயன்: கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பெற்றவன்.

"கந்தன் றனைநீர் போற்றிய கடனால் இவன்உங்கள்
மைந்தன் எனும்பெய ராகுக" [1-13-30]

என்பது கந்தபுராணம்;

**கடம்பன்:** கடப்பமாலையை அணிந்தவன்.

**வரதன்:** அடியார்களுக்கு வேண்டியவற்றை அளிப்பவன்.

**அதிகன்:** எல்லா உயிர்களுக்கும் மேலானவன்.

**குழகன்:** குழ என்றால் இளமை, அழகு என்று பொருள்: குழகன் என்றால் இளமையும் அழகும் உடையோன் என்ப தாம்.

**சேய்:** இளமையை உடையவன்.

**வேள்:** காமன், முருகன். காமனில் நின்றும் பிரித்துக் காட்ட முருகப்பெருமான் செவ்வேள் எனப்படுகிறான்.

மருதமால் வரையில் எழுந்தருளியுள்ள கந்தப்பெரு மானுக்கு உரிய தனிப்பெருஞ் சிறப்புகளை இனிக்காண்போம்;

தலையில் பின்குடுமியுடன் கண்டிகை அணிந்து, இரு கைகளுடன் திரிபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் இவன் காணப்படுகிறான். திரிபங்க நிலை என்பது ஒரு காலை நேராக வைத்து, மற்றொரு காலைச் சற்று வளைத்து முன்னால் வைத்திருப்பதாகும். இவன் ஒரு காலைச் சற்று முன்னால் வைத்திருப்பது தன் அன்பர்களுக்கு அருள் செய்ய இவன் விரைந்து செல்ல உள்ளதைக் குறிப்பால் உணர்த்து கிறது. சுமார் நான்கு அடி உயரமுள்ள இவன் கோவணம் அணிந்து வலக்கையில் ஞானத்தண்டேந்தி, இடக்கையைக் கடிமுத்திரையில் (இடுப்பில்) வைத்துள்ளான்.

சென்னிமலைத் தலபுராணத்தில் அங்கு எழுந்தருளியுள்ள முருகப்பெருமானது திருவுருவப் பொலிவினை,

"குஞ்சித நிலைத்த சேரடியிரண்டுங்
கோவண ஆடையும் மேகலையும்
விஞ்சுநூன் மார்பும் வேத்திரம் உக்கம்
விளங்கு கைத்தலங்களும் குழைதாழ்
செஞ் செவித் துணையும் துணைமலர்க் கண்ணுந்
திகழ்தனி வதனமும் பின்றாழ்
எஞ்சலில் சிகையும்"

என வெகு அழகாகச் சித்திரித்துக் காட்டுகிறது. இதைப் படிக்கும்போது இது மருதமலையானைப் பற்றிப் பாடிய தாகத் தோன்றுகிறது. அத்துணை பொருத்தமாக உள்ளது.

*14-4-1931* ஆம் நாள் மருதமலை இறைவனைக் கண் குளிரக்கண்டு ஆனந்த வெள்ளத்தில் திளைத்த அருளாளர் ஒருவர் எழுதியது இங்குத் தரப்படுகிறது:

''யாவருங் கண்டு தெரிசிக்குமாறு மருதவரைத் திருக் கோயிலில், அருள் நிறைந்து விளங்கும் முருகப்பிரானது மணம் கமழ் தெய்வத்தின் நலங்கொண்டு பல இளஞ்சூரியர்கள் ஒருங்கே வந்தது போல ஒளிரும் தெய்வீகத்திருக்கோலம். தன்னை அடைந்தாரது குற்றங்களை நீக்கிக் கோதாட்டும் திருத்தண்டத்தை யூன்றி, இடும்பைக் குன்றையெல்லாம் அறவேயெறிந்து கடக்கும் வேற்படையையேந்தி விளங்கும் திருவினையுடையது. திரு மிக்க இடையிலே பதித்த கைம் மலரும், அரையிலுடுத்த கோவணமும், அடைந்தாரைக் காத்துப் பகையெல்லாங் கடந்து, உயர்ந்து விளங்கும் திரு மார்பும், வெள்ளிய திருநீற்றை அழகு பெறப் பூசிய திருமுக மண்டலமும், அதற்குள்ளே திகழ்ந்து விளங்கும் அருள் பொழியும் நோக்கம் நிறைந்த திருவிழிகள் இரண்டும், புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும், மெய்யன்பர்களின் நெஞ்சத்திலிருந்து நீங்காது நிறைந்த இன்பந்தரும் தாமரைத்தாள்களும் கொண்டு நிற்கும் ஞான குருவாகிய குழந்தைக்கோலம். திருப்பொலிந்து திகழும் இத்திருவுருவை எவ்வாறு அலங்கரித்துக் காணினும் இன்பந் தரும் ஏற்றமிக்கது. நினைத்தொறும், காண்டொறும், பேசுந் தோறும் எப்போதுமே ஆனந்தத் தேன் சொரியும் திருக் குறிப்பு இத்திருவுருவின் குறிப்பாகும். அழகு வழிந்தொழுகும் இவ்வற்புத மூர்த்தியை வேடிக்கையாகவும், வேண்டாமலும் சென்று காண்போரும் பயன் பெறுவரென்றால், விரும்பி யடைந்தோர் பெறும் பயனை யாம் கூறமுடியாது.

[மருத வரை மாண்பும் மருதகிரியான் மகிமையும் பக்கம் 40-41]

இதைக்காட்டிலும் மருதமலை ஆண்டவனின் அழகைச் சொற்களால் எழுதிக்காட்ட இயலாது.

தன்னை அடைக்கலம் அடைந்த அன்பர்களுக்கு வேண்டுவன வேண்டியவாறு வேண்டுமளவும் வாரி வாரி வழங்கும் வள்ளல் இங்கு இடுப்பில் கோவண ஆடையுடன் விளங்குகிறான். இதில் ஒரு மாபெரும் உண்மை பொதிந் துள்ளது. உலகப் பொருள்களில் விருப்பம் கொள்வது துன்பத்திற்கு வித்து. விருப்பு அற்றவனுக்குத் துன்பம் இல்லை. விருப்பு அற்றால் வேண்டியவற்றைப் பெறலாம்.

''வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல'' (342)

என்பது தமிழ்மறை. நன்மைகளை அடைய வேண்டின், துறத்தல் வேண்டும்! இதை உலகுக்கு உணர்த்தவே உமை மைந்தன் இங்குக் கோவணாண்டியாக எழுந்தருளியுள்ளான். தன்னை அடைந்தவர்களுக்கு வாரி வழங்கும் வள்ளல் பற்றற்றவனாக இருக்கிறான். அவன் துறவுக்கோலம் பூண்டது அன்பர்களுக்கு அருள் பொழியத்தான். இவன் கோவணாண்டி யாக இருப்பினும் தன் அடியார்களுக்கு "சகல செல்வயோக மிக்க பெருவாழ்வு'' அளிக்கிறான். இது பிச்சை உகக்கும் பெருமான் இயல்புடன் ஒப்பிடத்தக்கதாக உள்ளது.

"பாரிடஞ் சூழ்வரத்தான் பலி கொண்டுந் தன் பாதமலர்
சேர் அடியார்க்குப் பெருவாழ்வு அளிப்பான்.''

என்பர் தமது ''திருக்கருவைக்கலித்துறை அந்தாதி''யில் வரதுங்கபாண்டியன் என்ற பாண்டிய மன்னன்.

இவன் பாம்பாட்டி சித்தரால் வழிபடப்பட்ட மூர்த்தி. பழனி, சென்னிமலையில் உள்ளது போலவே ஞானதண்டாயுத பாணியாக விளங்கும் இவனுக்குத் துணைவியர் இல்லை. எப்போதும் வெள்ளிக் கவசம் அணிந்துகொண்டு அரசு அலங்காரத்துடன் அழகு மிளிர இவன் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறான்.

குசத்துவராசன் என்ற மன்னன் மகப்பேறின்றிப் பேரூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பூசித்து இரு பெண் மக்களைப் பெற்றான்.

''மருதமா வரையிடை வதியும் வேற்படை
முருகனை வழிபடின் முடிகொண் மன்னவ
பெருவிறல் மைந்தனைப் பெறுவை யவ்வயின்
ஒருவிய கவலையின் உவந்து செல்கவே''

என்று இறைவன் ஆணையிட்டபடி, மருதமலையாண்டவனை வழிபட்டு மகனை அடைந்ததாகப் பேரூர்ப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

இங்கு எழுந்தருளியுள்ள பெருமான் தன் அடியார்களுக்கு அருள்பாலித்த திருவிளையாடல்களைத் திருக்கோயிலில் 40 ஆண்டுகளுக்கு மேலாகச் சிவாசாரியராகப் பணிபுரிந்து கொண்டிருக்கும் திருமிகு. M. R. மந்திராசலக் குருக்கள் வாயிலாக அறிந்தவை கீழே தரப்படுகின்றன:

மந்திராசலக் குருக்களின் பாட்டனார் நாகையாகுருக்கள் என்பவர். இந்தத் திருக்கோயிலில் இவர் சிவாசாரியராகப் பணிபுரிந்த காலத்தில் ஒருநாள் முருகப்பெருமானுக்குச் சாத்திய பூவைக் கோயிலைச் சார்ந்த தாசிக்குக் கொடுத்து விட்டார். அன்று மருதமலையானுக்கு அபிடேகம் செய்த செல்வந்தர் பூகேட்க, குருக்கள் தாசியிடம் கொடுத்தபூவை வாங்கி அன்பரிடம் கொடுத்தார். அன்பர் அந்தப் பூவில் முடி ஒன்றினைக் கண்டு குருக்களிடம் மருதமலையாண்டவன் தலையில் முடி உள்ளதா என்ற ஐயத்தை எழுப்பினார். அதற்கு விடையாகக் குருக்கள் முடி உள்ளதாகவும். அதை அடுத்த நாள் உச்சிக்காலப் பூசையின் போது காட்டுவதாகவும் கூறினார். அன்றுஇரவு 108குடம் நீரால் முருகப்பெருமானைத் திரு முழுக்குச் செய்து தமது வாக்கைக் காப்பாற்றுமாறு வேண்டிக்கொண்டார். அடுத்தநாள் உச்சிக்காலப் பூசையின் போது கந்த வேளுக்குக் கற்பூரம் சுழற்றிக் காட்டும் சமயத்தில் அந்த அன்பர் முன்னால் மூன்று சடைகள் வந்து விழுந்தன: அதைக் கண்ட அன்பர் வியப்பு எய்தினார்; சடைகளும்

மறைந்துவிட்டன. இவ்வாறு மருதாசல மூர்த்தி தன் அன்பரின் வாக்கைக் காப்பாற்றி அருள்புரிந்தான்.

O. K. செட்டிபாளையத்தைச் சார்ந்த கண்ணிழந்த குட்டியப்பகவுண்டர் என்பவர் தம் பேரனுடன் மருத மலைக்கு வந்தார். அவருக்குத் திராத வயிற்றுவலியும் உண்டு. மாலையில் 5 மணி அளவில் குருக்கள் போய்விட, கவுண்டர் தம் பேரனுடன் இங்குத் தங்கிவிட்டார். அன்று இரவு 12 மணி அளவில் அவருக்கு வயிற்று வலி உண்டாகித் தவித்தார். அது சமயம் "குட்டியப்பா, குட்டியப்பா, கதவைத்திற" என்ற குரல் கேட்க வெளியில் வந்து பார்த்தார். வெளியில் நின்று கொண்டிருந்த ,நாகைய குருக்கள், 'இதோ சுக்குக் கஷாயம், வெந்நீர், வெறும் சாதம் உள்ளன. வெந்நீரில் சாதத்தைக் கரைத்துச் சாப்பிட்டு, சுக்குக் கஷாயத்தையும் குடித்துவிடு. நோய் குணமாகிவிடும். இந்தப் பாத்திரம் இங்கேயே இருக் கட்டும். காலையில் நான் வந்து வாங்கிக் கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சென்று விட்டார். குருக்கள் கூறிய படியே கவுண்டர் கஷாயம் முதலியவற்றைச் சாப்பிட, அவர் நோய் நீங்கி நலமடைந்தார். காலையில் வந்த குருக்களிடம் அவர் இந்த நிகழ்ச்சியைக் கூறியபோது தாம் முதல் நாள் இரவு வரவில்லை என்றும், குட்டியப்பக் கவுண்டர் கொடுத்த பாத்திரத்தைத் தாம் முதல்நாள் மாலையில் கோயிலில் வைத்துப் பூட்டிச் சென்றதாகவும் கூறி அவர் வியப்படைந்தார். மருதமலை முருகனே குருக்கள் வடிவில் வந்து தன் அன்பரைக் காத்து அருளினான் என்பது தெரிகிறது.

சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு மருத மலையைப்பற்றி மக்கள் சரியாகத் தெரியாதகாலம். அப்போது கோவையைச் சார்ந்த திரு N. T. சுப்ரமணியம் என்பவர் மருதாசல மூர்த்தியை வணங்க இங்கு வந்து இருந்தார். அது சமயம் தவக் கோலம் உடைய ஒருவர் அவருக்குத் திருநீறு அளித்து, இந்தக் கோயில் பெரும் புகழை அடையப்போகிறது என்று முன் கூட்டியே தெரிவித்தார், அன்னாரது வாக்குப்படி இந்தக் கோயிலின் புகழ் இன்று தமிழகம் எங்கும் பரவி விட்டது என்றால், இதுவும் அவன் செயலன்றோ!

———

# 4. சமய இலக்கியச் சிறப்பு

சிவபெருமானுக்குத் தேவார திருவாசகங்கள் போன்றும், திருமாலுக்கு நாலாயிரதிவ்யப் பிரபந்தம் போன்றும் முருகப் பெருமானுக்கு உகந்தது அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்கள். அவர் தமிழகமெங்கும் முருகப்பிரான் உறையும் தலங்கள் தோறும் சென்று, படிக்கப் படிக்கத் தெவிட்டாத இன்னமுதமான பாடல்களைப் பாடியருளியுள்ளார். மருத மலைக்கும் அவர் வந்து பாடினார். மருதமலையானைப் பற்றிய அவர் பாடல் ஒன்று கிடைத்துள்ளது. அது வருமாறு :-

'திரிபுரம் அதனை ஒரு நொடி யதனில்
எரிசெய் தருளிய சிவன் வாழ்வே!
சினம் உடைஅசுரர் மனமது வெருவ
மயிலது முடுகி விடுவோனே!
அருவரை யதனை உருவிட எரியும்
அறுமுகம் உடைய வடிவேலா!
பசலையொ டணையும் இளமுலை மகளை
மதன்விடு பகழி தொடலாமோ!
கரிதிரு முகமும் இடைஉடை வயிறும்
உடையவர் பிறகு வருவோனே!
கனதனம் உடைய குறவர்தம்மகளை
கருணையொ டணையும் மணிமார்பா!
அரவணை துயிலும் அரிதிரு மருகா!
அணிசெயுமருத மலையானே!
அடியவர் வினையும் அமரர்கள் துயரும்
அற அருள்உதவு பெருமாளே!

அகத்துறையில் அமைந்துள்ள இப்பாடலில் முருகப் பெருமான் கிரவுஞ்ச மலையைப் பிளந்த பேராற்றல் மிக்- செயலைப்போற்றி, காதலால் துன்புறும் தன் இரங்குமாறு தாய் வேண்டிக்கொள்வது போன்

யுள்ளார். அவனது அறக்கருணையும், மறக்கருணையும் பரவப்படுகிறது.

சித்து பெற்றவர் சித்தர் எனப்படுவர். இறைவனை இடைவிடாது எண்ணி எண்ணி அகக் கண்ணாற் கண்டு, ஆத்ம சக்தியால் அரியபல காரியங்களைச் செய்வது சித்தர்களின் செயல்களாம். அருணகிரிநாதர் தமது 'திருவகுப்பு' என்ற நூலில் 'சித்துவகுப்பு' என்ற பகுதியில் சித்தர்களின் பல சித்து விளையாடல்களை விரிவாகப் பேசுகிறார். சித்தர் பதினெண்மர் என்பர். அவர்களில் ஒருவர் பாம்பாட்டி சித்தர். இவர் மருதமலையானை தாபித்தவர். இவரது சமாதி திருக்கோயிலின் தென்புறத்தில் உள்ள பள்ளத்தில் அமைந்துள்ளது. அங்குச் செல்ல நல்ல முறையில் படிக்கட்டுகள் அமைந்துள்ளன.

கொங்கு நாட்டில் ஒரு சில திருமுருகன் கோயில்களில் சித்தர்கள் சமாதி அடைந்துள்ளது வேறு எங்கும் இல்லாத தனிச்சிறப்பாகும். எடுத்துக்காட்டாக பழனியில் போகரும், சென்னிமலையில் புண் நாக்கு சித்தரும், சிவன் மலையில் சிவவாக்கிய சித்தரும், ஊதிமலையில் கொங்கணரும், கஞ்சமலையில் கஞ்சமலைச்சித்தரும் சமாதி அடைந்துள்ளனர்; இங்குப் பாம்பாட்டிசித்தர் சமாதி எய்தியுள்ளார்.

இவருடைய இயற்பெயர், பிறந்த ஊர்ப்பெயர், பெற்றோர்கள் பெயர் என்பன தெரியவில்லை. இவர் பாண்டிய நாட்டில் காடுகளில் காணப்படும் பாம்புகளைப் பிடித்து ஆட்டியும், தம் சொற்படி நடக்கச் செய்தும் வந்தார். ஒருசமயம் "நவரத்னம்" என்ற பாம்பைப் பிடித்து ஆட்ட முயற்சி செய்தபோது, 'சட்டை முனிவர்' என்பவரைச் சந்தித்தார். அவரிடம் தீக்கைபெற்று, யோகநெறியில் சமாதி கூடும் நிலை பெற்றார். ஒருசமயம் அவர் இறந்து போன அரசனது உடலில் கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தை மூலம் புகுந்தார். பல சித்துகளைச் செய்த அவர் இறந்த பாம்பை ஆட்டுவித்தமையால் 'பாம்பாட்டிசித்தர்' என்று அழைக்கப்பெற்றார்.

பல இடங்களுக்குச் சென்று கடைசியில் மருதமலையைத் தமக்கு உகந்த சிறந்த இடம் என்று தெரிந்து. இங்குத் தங்கினார். தம்மை அடைந்த மக்களின் பிணிகளை நீக்கினார். ''சித்தாரூடம்'' என்ற நூலை இயற்றிய பின் சமாதி எய்தினார்.

இவர் 129 பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றில் இறைவன் எங்கும் நிறைந்துள்ள தன்மை, செல்வ நிலையாமை, யாக்கை நிலை யாமை ஆகியவற்றை வலியுறுத்தியுள்ளார். பெண்ணாசையை விலக்கும்படி வற்புறுத்தியுள்ளார். வேதாந்தக் கருத்துகளையும் வழங்கியுள்ளார். அவர் தம் பாடல்களில் சில:

''பொன்னில் ஒளி போலவெங்கும் பூரணமதாய்
பூவின் மணம் போலத்தங்கும் பொற்புடையதாய்
மன்னும் பல உயிர்களில் மன்னிப் பொருந்தும்
வள்ளலடி வணங்கி நின்று ஆடுபாம்பே'' (3)

என இறைவனது தன்மையைச் சுட்டிக்காட்டுகிறார்.

''மலைபோன்று செம்பொற் குவை வைத்திருப்பவர்
மறலி தான் வருகையில் வாரிச்செல்வரோ!
அலையாமல் அகத்தினை அத்தன் பால் வைத்தோர்
அழியார் என்றே நீ துணிந்து ஆடு பாம்பே!'' (44)

என, செல்வ நிலையாமையைக்கூறி, இறையன்பர்களின் சிறப்பை எடுத்துக்காட்டுகிறார்.

''ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே
உதிரப்புனலிலே உண்டை சேர்த்தே
வாய்த்த குயவனார் அவர் பண்ணும் பாண்டம்
வறையோட்டுக்கும் ஆகாதென்று ஆடுபாம்பே!'' (60)

என்ற பாடலில் மானிடப்பிறப்பினை எள்ளி நகையாடுகிறார்.

இந்நாளிலும் இவர் சமாதி அடைந்த குகையில் ஒரு பாம்பு பாலும் பழமும் உண்டு செல்கிறது. அன்பர்கள் இதற்குப் பாலும் பழமும் நாடோறும் அளித்து வருகின்றனர்.

கச்சியப்பமுனிவர் இயற்றிய பேரூர்ப் புராணத்தில் அபயபடலம் மற்றும் மருதவரைப் படலத்திலும், திருத்துடிசைப் புராணத்தில் கிரிச்சருக்கத்திலும் மருதமலையைப் பற்றிய செய்திகள் வருகின்றன. மேலும் மருதமலையானைப் பற்றிக் கீழே குறிப்பிட்ட நூல்களும் உள்ளன.

மருதாசலமூர்த்தி சதகம், மருதாசலமூர்த்தி பதிகம், மருதாசலமூர்த்தி ஊசல், மருதாசலமூர்த்தி தாய் மகளேசல், மருதாசலமூர்த்தி சந்தக்கொச்சகம்,

—ஓராட்டுக்குப்பை செட்டி பாளையம் வித்துவான் குட்டிகவுண்டர்

மருதாசலபதி உயிர் வருக்கமாலை,

—கோவை வித்துவான் கந்தசாமி முதலியார்

தான்தோன்றி விநாயகர் பதிகம், மருதமலைக்குமரேசர் சந்தப்பதிகங்கள்.

—வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள்

மருதாசலக்கடவுள் பிள்ளைத்தமிழ்

—வடவள்ளி வித்துவான் மு. அருணாசல முதலியார்

மருதாச்லக்கடவுள் அலங்காரம், யமகவந்தாதி, சந்தப் பதிகம், மருதாசலக்குமரேசர் திருப்புகழ், மருதாசலர் சந்தப் பதிகம்

—சிரவணம்பட்டி கௌமார மடாலயம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

மருதமலையாண்டவர்பதிகம்

—சிர, கௌமாரமடாலயம தவத்திரு. சுந்தரசுவாமிகள்

மருதாசலப்பிள்ளைத்தமிழ், மருதீசர்வண்ணத்திருப்புகழ்

—விளாங்குறிச்சி ந. மருதாசலக்கவுண்டர்

மருதமலை வானவில்காட்சி, மருதமலை அம்மானை, மருதமலை வெண்பா

—கோவைகிழார் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார்

மருதப்பிரான் மீது சித்திரக் கவிகள்

—செட்டிபாளையம் வித்துவான்
R. N. கலியாணசுந்தரக் கவுண்டர்

மருதமலைத் திருப்புகழ். 400 பாடல்கள்

—உடுமலை முருகதாசர்

———

## 5. வரலாற்றுத் தொன்மை

இந்தத் திருக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. இருப்பினும் அவினாசி வட்டத்திலுள்ள தேவாரப்பாடல் பெற்ற திருமுருகன் பூண்டியில் இருகல்வெட்டுகளில் இந்தத் திருக்கோயிலின் முருகப்பெருமானது பெயர் காணப்படுகிறது;

(அ) No. 249 [A. R. No. 573 of 1893]

ஸ்வஸ்தி ஸ்ரீதிரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு எட்டாவது பெருமான் சாமந்தரில் மருதமலையனான குலோத்துங்கசோழ விக்கிரமாதித்த தேவனேன் ஆளுடைய திருமுருகன் பூண்டியாண்டார்க்குச் சந்தியா தீபம் ஒன்றுக்கு ஒடுக்கின பழஞ்சலாகை அச்சு ஒன்றின் உபயங் கொண்டு சந்தியா தீபம் ஒன்றும் சந்திராதித்த வரை செல்வதாக. இது பன்மாரெக்ஷை.

அவை : (ஆ) No. 250 [A. R. No.574 of 1893]

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு எட்டாவது பெருமான் சாமந்தரில் மருதமலையனான குலோத்துங்க சோழ விக்கிரமாதித்த தேவனேன் ஆளுடையான் திருக்குரக்குத் தளியாண்டாற்கு சந்தியாதீபம் ஒன்றுக்கு ஒடுக்கின பழஞ்சலாகை ஒன்றில் உபயங்கொண்டு சந்தியாதீபம் ஒன்று சந்திராதித்தர் வரை செல்வதாக. இது பன்மா மகேசுரரக்ஷை.

மேலே கண்ட இரு கல்வெட்டுகளில் குறிக்கப்பட்ட குலோத்துங்கசோழன் கொங்குநாட்டை ஆண்டசோழனாதல் வேண்டும். அவனது ஆட்சிக்காலம் கி. பி. 1149 முதல் 1183 வரையாகும். அவனுடைய சிற்றரசர்களில் ஒருவனான மருத மலையான் என்பான் தன் அரசனுக்குச் செய்த உதவிகளுக் காக "குலோத்துங்கசோழ விக்கிரமாதித்த தேவன்" என்ற பட்டப்பெயர் பெற்றான். அவன் குலோத்துங்கசோழனின் எட்டாவது ஆட்சி ஆண்டில் திருமுருகன் பூண்டி திருமுருகா வுடையாருக்கும், திருக்குரக்குத் தளி என்ற வைப்புத்தலமான பெரிய பாளையத்துச் சுக்ரீசுவரருக்கும் விளக்கு எரிக்க பழஞ் சலாகை என்ற பொன் நாணயம் ஒவ்வொன்றும் அளித்த தாகத் தெரிகிறது.

கொங்கு நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற மற்றொரு தலமான அவினாசித் திருக்கோயில் கல்வெட்டு ஒன்றால் வீரராஜேந்திரன் காலத்தில் மருதன் முதலி வணிகச் சக்கர வர்த்தி என்ற பேரூர் நாட்டு முட்டத்து வியாபாரி ஒருவன் இருந்தான் என்பது தெரியவருகிறது. கொங்குச் சோழனான வீரராஜேந்திர சோழன் கி. பி. 1201 முதல் 1252 வரை செங்கோலோச்சியவன்.

மேலே குறிப்பிட்ட கல்வெட்டுகள் சிற்றரசர்களும் வணிகச் சக்கரவர்த்திகளும் மருதமலை 'முருகப்பெருமானது பெயரைக் கொண்டிருந்தார்கள் என்பதைத் தெரிவிக்கின்றன. சிற்றரசர்களும் வணிக மன்னர்களும் இவன் பெயரைக் கொண்டிருப்பதினின்றும் இப் பெயர் மக்களிடையே பெரு மளவில் வழக்கில் இருந்திருக்க வேண்டும். சுமார் 800 ஆண்டுகளுக்கு முன்பே மருதமலையானுடைய பெருமையை மக்கள் உணர்ந்து இருந்தார்கள் என்பது தெரிகிறது. எனவே இந்தத் தலம் 800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மை வாய்ந்தது எனக்கொள்ளலாம்.

---

## 6. தெய்வீகக் காட்சிகளும், திருக்கோயிலும்

மலையடிவாரத்தில் சற்றுத்தள்ளி வள்ளியம்மன் தனி யாகக் கோயில் கொண்டுள்ளாள். அருணகிரிநாதருக்கும் தனி யாகச் சிறிய கோயில் ஒன்று அருணகிரிநாதர் கிருத்திகைக் கழகத்தாரால் கட்டப்பட்டுள்ளது. மலையடிப்பாதை 837 படிகளைக் கொண்டது. இதன் தொடக்கத்தை அழகான முன் மண்டபம் அலங்கரிக்கிறது.

முன் மண்டபத்தைக் கடந்து சென்றால், பாறையில் பிள்ளையார் காணப்படுகிறார். இவர் உளிபடாத காரணத் தால், தான்தோன்றிப் பிள்ளையார் என்ற பெருமையை உடையவர். இவர் மலைமீதுள்ள தம் தம்பியான முருகனைப் பார்த்தபடி மேற்கு நோக்கி அமர்ந்துள்ளார். இவரை அடுத்து சிற்பிகளால் செதுக்கப்பெற்ற பிள்ளையாரும் காணப்படுகிறது.

அடுத்துக் காணவேண்டியது 18படிகள். சரியாக 18படிகள் இருக்கின்றன. இந்தப் படிகளை அடுத்து அநுமான் சிலை ஒன்று உள்ளது. இங்கிருந்து நேர் வடகிழக்கில் மலைச் சாரலில், 3கற்கள் மலையினின்றும் மாறுபட்ட நிறத்தில் தெரி கின்றன. இவை மூன்றும் கல்லாகச்சபிக்கப்பட்ட திருடர்கள். இவர்கள் நள்ளிரவில் உண்டியலை உடைத்துப், பொருள் களைத் திருடிக்கொண்டு சென்றனர். முருகப்பெருமான் வேடுவ வடிவில் குதிரை மீது சென்று அவர்களைக் கற்களாகச் சபித்து விட்டார். மேலும் இங்கு நாய், குதிரை, மற்றும் நகைப்பெட்டி போன்ற அமைப்புகளில் கற்கள் காணப் படுகின்றன. 18 படிகளைக் கடந்து சென்றால் புளியமரத்து மேடை உள்ளது. இங்கிருந்து குறி சொன்னால், அது பலிக்கும் என்ற நம்பிக்கை இப்பகுதியில் நிலவுகிறது.

அடுத்து இடும்பன் கோயில் காணப்படுகிறது. சூரபன்மன் முதலிய அவுணர்களின் ஆசானும், முருகனிடம் பேரன்பு கொண்டவனுமான இவன் நின்றநிலையில் தன் இருகைகளால் காவடியை ஏந்திய நிலையில் அமைக்கப்பட்டுள்ளான். இவன்

பூர்ச்ச வனத்தினின்றும் அகத்திய முனிவருக்காக சக்திமலை, சிவன்மலை ஆகிய இரண்டினையும் காவடியாகக் கொணர்ந் தான். சென்னிமலையில் இவனுக்கு வழிகாட்டிய முருகப் பெருமான் திருஆவினன் குடியில் அவற்றை நிலைபெறச் செய்துவிட்டான். கந்தவேளுக்குக் காவடி கொண்டுவந்து வழிபடும் மரபு இதனால் ஏற்பட்டது. இடும்பன் கோயிலைச் சுற்றி அன்பர்கள் தங்கி இளைப்பாற நல்லதோர் மண்டபம் உள்ளது.

அடுத்துக் காணவேண்டியது குதிரைக் குளம்பு என்ற அருட்குறியுடன் கூடிய மண்டபமாம். பாறை ஒன்று இயற்கை யாகக் குதிரைக் குளம்படிச் சுவடுபோன்று அமைந்துள்ளது. கள்வர்களைத் தொடர்ந்து சென்ற செவ்வேளின் குதிரைக் குளம்பின் அடிச்சுவடு என்ற தெய்வ நம்பிக்கையுடன் அன்பர்கள் இதைப் பூசித்து மேலே மலை ஏறிச்செல் கிறார்கள்.

வாகனங்கள் செல்லும் மலைப் பாதையும், மக்கள் நடந்து செல்லும் படிகளாலான பாதையும் சேரும் இடத்தில் வாகனங்களை நிறுத்த வெட்டவெளி உள்ளது. இங்கு இந்த மலையின் ஆதிவாசிகளான இருளர்கள் வீடுகள் உள்ளன. இது இருளர்பதி அல்லது மருதைப்பதி என்று அழைக்கப் படுகிறது. இவர்கள் பொதுவாக மலைபடு பொருள்களைச் சேகரித்து விற்பனை செய்வதன் மூலம் தங்கள் வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். இவர்களில் ஒரு சிலர் கல்வி கற்று, அரசுப்பணி ஆற்றி வருகிறார்கள். தற்போது இவர்களுக்குத் தொலைக் காட்சி (Television) வசதி செய்யப்பட்டுள்ளது.

வாகனங்களை நிறுத்தும் வெட்டவெளிக்கு எதிரில் திருக் கோயிலைச் சார்ந்த திருமண மண்டபமும், அதை ஒட்டி குளிக்கும் அறைகள், முடிகாணிக்கை அளிக்கும் கொட்டகை, தேவர்மடம், சிற்றுண்டிச் சாலை ஆகியவை உள்ளன. படிகள் முடியும் இடத்தில் கோயில் அலுவலகம் வடக்கு நோக்கி உள்ளது.

திருக்கோயில் மலைச்சாரலில் உள்ள பீடபூமியில் அமைந்துள்ளது. இது கருவறை, அந்தராளம், மகாமண்டபம்,

முன்மண்டபம், திருச்சுற்று ஆகியவற்றைக் கொண்டது. கருவறையில் மூலவருடன் அவனை வழிபட்ட பாம்பாட்டி சித்தரின் சிறிய செப்புச் சிலை உள்ளது. மகா மண்டபத்தில் அந்தராளத்தை ஒட்டி அன்பர்கள் உட்கார்ந்து முருகப் பெருமானை வணங்க வகை செய்யப்பட்டுள்ளது. மகா மண்டபத்தில் மேல்புறமாக வடபுறமும் தென்புறமும் இரு மேடைகள் அமைக்கப்பட்டுள்ளன. தென்புறம் உள்ள மேடையில் பிள்ளையார், கைலாயநாதர், மார்க்கண்டேசுவரர், வீரவாகு, கந்த சண்டிகேசுவரர் ஆகியோரின் சிலை வடிவங்கள் உள்ளன. வடபுறமாக இரும்பு வேலியிட்ட மேடையில் பிள்ளையார், இரு துணைவியர்களுடன் முருகப் பெருமான், சூலதேவர், ஞானதண்டபாணி ஆகியோரின் திரு வீதிஉலா நாயகர் வடிவங்கள் [உற்சவர்கள்] காணப்படு கின்றன. 6 தூண்களைக் கொண்ட மகாமண்டபத்தின் தென் புறத்தில் வாயிலும், அதை ஒட்டி ஒரு சிறிய மண்டபமும் உள்ளன. கருவறைக்கு எதிரில் மகா மண்டபத்திற்கு நடுவில் மருதாசலாதிபதியை அன்பர்கள் யாவரும் கண்குளிரக்காண இருபுறமும் இரும்பு வேலி போடப்பட்டுள்ளது. அதன் இரு புறமும் அன்பர்கள் நின்று முருகப்பெருமானை வணங்கலாம். மகாமண்டபத்திற்கு முன்னால் 24 தூண்களை உடைய முன் மண்டபம் உள்ளது. இதில் நடுவில் மயில் இருக்க, இடப் புறம் கந்தவேளைத் திருமணத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும் நிலையில் வரதராஜப் பெருமான் காணப்படுகிறார். இதற்கு முன்னால் கொடிக்கம்பம் உள்ளது.

திருச்சுற்றில் முருகப்பெருமானது கருவறைக்கு வலப் பக்கம் பட்டீசுவரர் திருமுன்னும், இடப்பக்கம் மரகதாம்பாள் திருமுன்னும் அமைந்துள்ளன. அன்னைக்கும் அத்தனுக்கும் நடுவில் சேய் எழுந்தருளியிருப்பது சோமாஸ்கந்த வடிவம் என்று சொல்லப்படும். திருக்கோயில்களில் இவ்வாறு அமைவது அரிய ஒன்றாகும். ஸ + உமா + கந்த = சோமாஸ் கந்தம். அதாவது சிவனுமைமுருகு திருவுரு என்பதாம். இது சத் + சித் + ஆனந்தம் ஆகியவற்றைக் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. தேவாரப் பாடல்களில் ஓர் இடத்தில்

மட்டும் அதுவும் குறிப்பாக இந்த வடிவம் கூறப்பட்டுள்ளது. கி. பி. 680 முதல் 700 வரை பல்லவ அரியணையை அலங்கரித்த பல்லவப்பேரரசன் இராசசிம்மன் காலத்திய சிறப்பாள் பாணியாக இது கருதப்படுகிறது. மேலும் இது இந்தியநாட்டில்வேறு எங்கும் காணப்படாது தமிழகத்திற்கே உரிய ஒன்றாம்.

அன்னையின் திருமுன்னைக் கடந்து சென்றால், நவ கோள்களின் திரு முன் உள்ளது. கோயிலுக்கு முன்னால் மலைச்சரிவு வரையில் 236 அடி நீளம், 166 அடி அகலம் 19 அடி உயரம் உள்ள மேடை அமைக்கப்பட்டுள்ளது. கோயிலுக்குத் தென்புறம் கல்யாணமண்டபம் உள்ளது. இங்கு தைப்பூசம் மற்றும் ஐப்பசி சட்டி ஆகிய விழா நாட் களில் மருதாசல மூர்த்திக்குத் திருக்கல்யாணம் நடைபெறு கிறது. இதற்கு முன்னால் திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் நடத்தப்பெறும் புத்தகக்கடை உள்ளது.

கல்யாண மண்டபத்தையொட்டி, தென்புறத்தில் ஆதி மூலஸ்தானம் உள்ளது. இது கருவறையுடன் சுற்று மண்டபத்தையும் கொண்டது. இதில் மன்றாடி மைந்தன் தன் இரு துணைவியர்களுடன் சுவயம்புமூர்த்தியாக எழுந் தருளியுள்ளார். உருவமற்ற இந்த மூன்று வடிவங்களும் சூரபன்மனுடைய கொடுமைகளுக்கு ஆற்றாது மருதமால் வரையை அடைந்த அமரர்களால் பூசிக்கப்பட்டனவாம்.

சுமார் 35 ஆண்டுகளுக்குமுன் கோவை திரு. S. N. பொன்னே கவுடர், வெள்ளைக்கிணறு திரு. V. C. வெள்ளியங்கிரிக் கவுண்டர், O.K. செட்டிப்பாளையம் திரு. நஞ்சப்பகவுண்டர், மற்றும் பழனி சாதுசுவாமிகள் ஆகியோர் முன்னிலையில் இங்குள்ள மூலவரைச் சுற்றி 6 அடி ஆழம் தோண்டப்பட்டது. 6 அடி அஸ்திவாரம் தோண்டும் மரபைப்பின்பற்றி 6 அடி ஆழம்தான் தோண்டப்பெற்றது. 6 அடி ஆழம் தோண்டிய பின்னும் மூலவரின் கீழ்ப்பகுதி காணப்பெறாமையால், இது மனிதர்களால் நிறுவப்பட்டது

அன்று! தானே தோன்றியது என்று உறுதியாகத் தெரிந்தது. அதன்பின் இங்குக் குடமுழுக்கு நடைபெற்றது. [இந்தத் தகவல்களை அளித்தவர் திருமலி மந்திராசல குருக்களாவர்]

இங்கிருந்து பாம்பாட்டிசித்தர் குகைக்குச் சுரங்கவழி இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆதி மூலஸ்தானத்தில் பூசை நடைபெற்ற பின்பே. மூலவருக்குப் பூசை செய்யப்படுகிறது.

கொடி மரத்திற்குத் தென்புறம் சுற்றுத் தொலைவில் அரசமரத்து மேடை உள்ளது. இந்த மேடையின் நடுவில் அரசு, ஆல், நுணா, வேம்பு, வக்கணை என்ற ஐந்து மரங்கள் ஒன்று சேர்ந்து ஒருருவைப் போன்று காணப்படுகின்றன. இதன் அடியில் பிள்ளையாரும், பாம்பு உருவங்களைக் கொண்ட கற்சிலைகளும் உள்ளன. இங்கு உடலுக்கு நலம் அளிக்கும் நல்ல குளிர்ந்தகாற்று வீசுகிறது. கோடைகாலத்தில் கூட வெய்யிலின் கடுமை தெரியாது.

கோயிலுக்குத் தென்புறம் அமைந்துள்ள படிக்கட்டுகளில் இறங்கிக் கீழே சென்றால், பாம்பாட்டி சித்தர் சமாதியை அடையலாம். சமாதிக்குச்செல்லும் வழியினின்றும் சற்றுப் பிரிந்து செல்லும் பாதையில் ஏழு கன்னியர்களின் உருவங்களைக் கொண்ட பாறை உள்ளது. கோயிலுக்கு வடக்கு, தெற்கு, மேற்கு திக்குகளில் தனிப்பட்டவர்களின் மடங்கள் கட்டப்பட்டுள்ளன. வடபுறம் உள்ள மடங்களையொட்டி 2 தேர்களைக்கொண்டதேர் நிலையம் உள்ளது. மருதமலை மற்றும் அனுபாவிமலை ஆகிய இரண்டும் சேரும் இடத்தில் உச்சிப்பிள்ளையார் கோயில் அமைந்துள்ளது.

— —

# 7. திருப்பணிகள் : நடந்தவை, நடைபெற உள்ளவை

மருதமலையானிடம் பேரன்பு மிக்குடைய அன்பர்கள் பலரால் பலதிருப்பணிகள் நடைபெற்றுள்ளன. அவை யாவன :

மருததீர்த்தத்தை மக்கள் அசுத்தம் செய்யாதிருக்கும் பொருட்டு அன்பர் ஒருவர் சிறிய வாயிலுடன் நாற்புறமும் கற்சுவர்கள் எடுப்பித்தார். வெள்ளைக்கிணறு திரு V. C. வெள்ளியங்கிரி கவுண்டர் தீர்த்தங்களுக்குச்சற்று தள்ளி ஒரு கற்சுவர் கட்டினார். இங்குக் குழாய்கள் மூலம் தீர்த்தங்களினின்றும் தண்ணீர் வர ஏற்பாடு செய்தார். ஆண்களும், பெண்களும் தனித்தனியாகக் குளிக்கத்தக்க ஏற்பாடுகளையும் செய்தார். பெருமழை காரணமாக ஏற்பட்ட பெரு வெள்ளத்தில் பாறைகள் உருண்டு இவற்றை அழித்து விட்டன.

கி. பி. 1890இல் காளப்பநாயக்கன் பாளையத்தைச் சார்ந்த திரு. பொன்னே கவுடர் மற்றும் வடமதுரை திரு. சிற்றம்பல முதலியார் ஆகியோர் மக்களிடம் நன்கொடை வசூலித்து ரூ. 5000/- செலவில் முன்மண்டபம் திருச்சுற்று ஆகியவற்றைக் கட்டினார்கள்.

சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் மருதமலை ஏற சீரான படிகள் இல்லை. குண்டும், குழியுமாக இருந்ததால், மலை ஏறிச்செல்வது அன்பர்களுக்குச் சிரமமாக இருந்தது. அன்பர்களிடமிருந்து நன்கொடைகள் பெறப்பட்டு, படிகள் நீள, அகலமாக அமைக்கப்பட்டன. இதனால் குழந்தைகள் முதல் முதியோர்வரை எல்லா வயதினரும் எளிதாக மலை யேறிச்செல்ல முடிகிறது.

கோவை வணிகர் திரு. S.N. பொன்னே கவுடர் இருளன் ஒருவன் உதவியால் பாம்பாட்டி சித்தர் சமாதி அடைந்த இடத்தை அறிந்தார். அங்குச்செல்ல நடைபாதை, அன்பர்கள் வணங்க உயரமானமேடை, பொருள்களைத் திருட்டுப்

போகாது பாதுகாக்க இரும்புக்கம்பிகள் கொண்ட மரக்கதவு ஆகியவற்றை அமைத்துக் கொடுத்தார். சித்தரின் செப்புருவச்சிலை, உருவப்படம், செம்பட்டுப் போர்வை, வெள்ளிப் பாதகுறடு, மான்தோல் ஆதனம் ஆகியவற்றையும் தம் காணிக்கையாக அளித்தார். மேலும் நாட்பூசைக்கும் ஏற்பாடுசெய்தார்.

ஆதிமூலஸ்தானத்தை ஒட்டியுள்ள கல்யாணமண்டபம் காளப்பநாயக்கன்பாளையம் பாலவேளாளக் கவுண்டர்களால் கட்டப்பெற்றது.

கோவை ஆனந்தகுமார் மில்ஸ் திரு. நடராசன் என்பவர் மருதமலையான் திரு உலா வர, தங்கமயில் வாகனமும், வள்ளியம்மை, தெய்வயானை அன்னை ஆகியோரின் திருவீதி உலாவடிவங்களுக்கு [உற்சவர்] தங்கக்கவசங்களும் செய்து கொடுத்தார். மேலும் தேர்கள் நிற்பதற்குத் தேர் நிலையம் ஒன்று அமைத்துக் கொடுத்துள்ளார். தெலுங்கபாளையம் வேலாயுதக் கவுண்டர் தமது உபயமாக வெள்ளிமயில் வாகனம் அளித்துள்ளார்.

திருக்கோயிலுக்கு முன்னால் பெரிய குழி ஒன்று இருந்தது. இதை நிறைத்து 236 அடி நீளம், 166 அடி அகலம், 91 அடி உயரத்தில் மேடை அமைக்க உதவியவர் கோவையில் சைக்கிள் வியாபாரம் செய்துவந்த திரு. N. சின்னசாமி நாயுடு என்பவராம். இது 6-2-1946இல் திறக்கப்பட்டது. இந்த மேடை அமைக்கப்பட்டது கோயிலுக்கு நல்லதொரு தோற்றத்தையும் பொலிவினையும் அளித்துள்ளது.

பஞ்சாலைத் தொழிலாளர்கள் இன, அரசியல், மொழி வேறுபாடின்றி மருதமலை அருணகிரிநாதர் அருள்நெறி கிருத்திகைக் கழகம் என்ற அமைப்பினை ஏற்படுத்தியுள்ளனர். இந்தக் கழகத்தின் பெருமுயற்சியால் இடும்பன் கோயிலைச் சுற்றிலும் நல்லதோர் மண்டபம் கட்டப் பட்டுள்ளது.

மருதமலை என்றாலே திரைப்படத்தயாரிப்பாளர் திரு. எம். எம்.ஏ, சின்னப்பத்தேவர் நினைவு வருவது இயற்கையே,

'துணைவன்,' 'தெய்வம்,' மற்றும் 'திருவருள்' ஆகிய திரைப் படங்கள் மூலம் தமிழகம் எங்கும் மருதமலை முருகனின் சிறப்பைப் பரவச்செய்ய மாபெரும் பணியைச்செய்தவர்.

'கோடி மலைகளிலே கொடுக்கும்மலை-எந்தமலை
கொங்குமணி நாட்டினிலே குளிர்ந்தமலை—எந்தமலை
தேடிவந்தோர் இல்லமெல்லாம் செழிக்கும்மலை-எந்தமலை
தேவாதிதேவரெல்லாம் தேடிவரும்-மருதமலை'

என்ற பாடலைக்கேட்போருக்கு மருதமலையைக் காண ஓர் ஆவலைத்தூண்டியவர் தேவர் என்றால் அது சற்றும்மிகையாகாது. 'திருவருள்' என்ற திரைப்படத்தில்,

"இது வரைக்கும் இருப்பது எங்கள் முருகனுக்கு
ஆறுபடை ஆறுபடை ஆறுப்படை ஆறுபடை
இன்று எங்கள் மருதமலைக்கோயில் ஒரு
ஏழுபடை - ஏழுபடை - ஏழுபடை"

என்று முழக்கியதன் மூலம்மருதமலை ஏழாவது படைவீடாகப் போற்றும் அளவு புகழ்பெற்றது,

ரூபாய் 10,000/- செலவில் அவர் மூலவருக்குத் தங்கக் கவசம் செய்து கொடுத்துள்ளார். அடிவாரத்தில் அழகான முன்மண்டபம் அமைத்துக் கொடுத்ததுடன், 1963ஆம் ஆண்டு அடிவாரம் முதல் மேலே திருக்கோயில் வரை மின் விளக்குவசதி செய்து கொடுத்துள்ளார். இதனால் இரவிலும் மலையேறிச்சென்று அன்பர்கள் மருதமலையானை வணங்க முடிகிறது. இதுவுமன்றி, மலைமீது வாகனங்கள் செல்ல ரு $3\frac{1}{2}$ இலட்சம் செலவில் சுமார் $2\frac{1}{2}$ கி. மீ. தொலைவுள்ள மலைப்பாதையும் அமைத்துக் கொடுத்துள்ளார். அடிவாரத்தில் ஒரு கல்யாணமண்டபமும், மலைமேல் ஒரு கல்யாண மண்டபமும் என இருகல்யாணமண்டபங்கள் அவர் பெயரில் கட்டப்பெற்றுள்ளன. இவை கோயிலின் நிர்வாகத்தில் உள்ளன.

திரு-சின்னப்பத்தேவர் மறைவிற்குப்பின் அவர்மகன் திரு தண்டபாணி தம் தந்தை தொடங்கிய நற்பணியைத்

தொடர்ந்து நடத்திவருகிறார். படிகள் கொண்ட மலைப் பாதையில் அன்பர்கள் தங்கி இளைப்பாற 10 மண்டபங்களும், தான்தோன்றிப் பிள்ளையார் கோயிலும், பாம்பாட்டி சித்தர் கோயிலும் அவருடைய திருப்பணிகளாம்.

இந்தத் திருக்கோயிலைத் தற்போது கோபுரம் அணி செய்யவில்லை. ''கோபுரஞ் சூழ் மணிக்கோயில்'' என ஞான வேந்தரும், ''கோலக்கோபுரம்'' எனத் தாண்டக வேந்தரும் தம் திருப்பாடல்களில் குறிப்பிடு வதினின்றும் முற் காலத்தில் கோபுரங்கள் இருந்தமை தெரியலாம். இருப்பினும் இக்காலத்தில் காணும் அளவு கோபுரங்கள் வியத்தகு வளர்ச்சியை அடைந்தகாலம் கி. பி. 1100 முதல்தான். வான ளாவிய கோபுரங்கள் பிற்காலச் சோழர்கள் அல்லது பாண்டியர்கள் பாணி என வரையறுக்கப்பட்டுள்ளது. வேறு எங்கும் காண இயலாத விண்ணுற நிமிர்ந்த கோபுரங்கள் தமிழகத்தின் தனிப்பெருஞ் சிறப்பாக உள்ளன.

நெடுந்தொலைவிலிருந்து காண்பவர்களுக்குக் கோபுரம் இறைவனை நினைவு ஊட்ட உறுதுணையாக உள்ளது; அதைக்காணும்போது இறைவனது திருவுருவாகக் கொண்டு வணங்க வேண்டும் என்பது முறை. இலிங்கம் இறைவனின் அடையாளம்; திருக்கோபுரத்தில் உள்ள ஓவியங்கள் இறை யுண்மையைக் காட்டும் ஓவிய நூல்களாம்; திருக் கோபுரம் இறைவனின் பேரடையாளம். ஆக இறைவனது மூன்று திரு வடையாளங்களில் திருக்கோபுரம் ஒன்று. இதைக்கரு வறையாக விளக்கியுள்ளார் ஜேம்ஸ் ஹார்லே என்பார் ''ஒரு தென்னிந்தியக்கோயிலின் கோபுரங்கள்'' என்ற தமது நூலில்.

இப்பெருங்குறையை நீக்க தற்போது கோயிலுக்கு முன்னால் 5 நிலை கொண்ட கோபுரம் அமைக்க வேலை தொடங்கியுள்ளனர்.

கருவறை நீங்கலாக ஏனையவற்றை மாற்றி அமைக்க இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையரின் அனுமதி பெறப் பட்டுள்ளது. அழகிய சிற்பங்களைக் கொண்ட தூண்களை உடைய மகாமண்டபம், சோபன மண்டபம், அன்னை, நவ

கோள்களுக்குத் திருமுன்கள் ஆகியவற்றைப் பொலிவுடன் கட்ட, திட்டமிடப்பட்டுள்ளது. இதன் மதிப்பீடு ரூ 60/- இலட்சம் எனப்படுகிறது. ரூ 10/- இலட்சத்தில் தங்கரதம் செய்யவும் திட்டமிடப்பட்டுள்ளது.

மேலும் திருக்கோயில் நிதியினின்றும் கீழே குறிப்பிட்ட திருப்பணிகள் நடைபெற உள்ளன :-

| | | |
|---|---|---|
| 1. திருக்கோயிலுக்கு வாகன மண்டபம் கட்டுதல் | ரூ. | 3-05 இலட்சம் |
| 2. அலுவலகம் கட்டுதல் | ரூ. | 3-00 ,, |
| 3. வடவள்ளியில் சித்த மருத்துவ மனை கட்டுதல் | ரூ. | 1-50 ,, |
| 4. செயல் அலுவலர் குடியிருப்பு கட்டுதல் | ரூ. | 2-20 ,, |
| 5. மலைமேல் வாகனங்கள் நிறுத்தும் இடத்திலிருந்து தேவர் மடம் வரை படிக்கட்டுகளைச் செப்பனிடுதல் | ரூ. | 1-20 ,, |
| 6. இதர சிறு வேலைகள் | ரூ. | 1-00 ,, |

திட்டமிடப்பட்ட திருப்பணிகள் முடிவு பெற்றபின் மருதமலையான் திருக்கோயில் கண் கவர் எழிலுடன்திகழும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

———

## 8. திருவிழாக்கள் – விரதங்கள்

இறைவன் அன்பர்களுக்கு அருள் பாலிக்கச்செய்த திரு விளையாடல்களை மக்கள் அறியவும், அவர்களின் இறை யன்பை வளர்க்கவும் திருக்கோயில்களில் திருவிழாக்கள் நடத்துவது தொன்றுதொட்டு இருந்து வந்துள்ளது. எடுத்துக் காட்டாக ஞானப் பெருந்தகையாராகிய ஞான சம்பந்தர் பூம் பாவையின் என்பைப் பெண்ணாக்கிய மயிலாப்பூர் திருப் பதிகத்தில் ஐப்பசி ஓணத் திருவிழா, மார்கழித் திருவாதிரைத் திரு நாள், தைப் பூசம், பங்குனி உத்திரம், சித்திரை அட்டமி ஆகிய திருவிழாக்களைக் குறிப்பிட்டுள்ளார். நீண்ட நெடு நாளைய அம்மரபினை யொட்டி, இங்கும் பல திருவிழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன. அவையாவன :

இங்கு நடைபெறும் திருவிழாக்களில் தைப் பூசத் தேர்த் திருவிழா முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது. 10 நாட்கள் இது கொண்டாடப்படுகிறது. கடைசி நாளன்று தேர்த் திரு விழா நடைபெறுகிறது. வளர்பிறை பூச நட்சத்திரத்தன்று இது கொண்டாடப்படுகிறது. மலைவழி முழுதும் அரகரஎன்ற ஒலியும், திருப்புகழ் இசையும், முருகப்பெருமானுடைய திருப் பெயர்கள் முழக்கமும் மிகுந்திருக்கும். திங்கள் தோன்றிய சிறிது நேரத்தில் தேர்வடம் பிடித்து இழுக்கப்படும். அதற்கு முன் பழங்கால வழக்கத்தை ஒட்டி, ஆறை நாட்டுக் காணியாளராகிய பாலை வேளாளச் சமூகத்துத்தலைவரை அவர் தங்கியிருக்கும் இடத்திற்குக்கோயில் மாரியாதைகளுட னும் மேளதாளங்களுடனும் கோயில்குருக்கள் அறங்காவலர் களும் சென்று, சந்தனம்பூசி, பரிவட்டம்சாத்தி, மாலைசூட்டி, தேர் நிலையத்திற்கு அழைத்து வருவார்கள். முருகப் பெருமானுக்குக் கற்பூரம் சுழற்றிக்காட்டி, திருநீறு வழங்கிய பின், தேரை வடம் பிடித்து இழுப்பார்கள். இதுசிக்கரம் பாளையம் நடராசக் கவுண்டரால் நடத்தப்படுவதாகத் தெரிகிறது. இரவு முழுதும் ஆயிரக் கணக்கான மக்கள் விழித் திருந்து விழாவினைக் கண்ணாரக் கண்டு மகிழ்ச்சி அடை கிறார்கள். இவர்கள் வீட்டிலும் முருகப் பெருமானுக்குத்

தேனும் தினைமாவும் கொண்டு மாவிளக்கு எடுத்து வணங்கு கிறார்கள்.

அடுத்துக் குறிப்பிடத்தக்கது சூர சங்காரத் திருவிழா வாகும். ஐப்பசி மாதத்தில் தீபாவளிக்கு ஆறாம் நாளில் சட்டிதிதியில் இது கொண்டாடப்படுகிறது. இதற்கு முன் 6 நாட்களும் கோயில் திருவிழாக்கோலம் பூண்டிருக்கும். பெரு வலி படைத்த சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் ஆகியோரை ஆறுமாமுகன் அழித்து விண்ணோர்களுக்கு அவர்கள் இழந்த பதவிகளை மீளவும் கொடுத்ததைச் சிறப்பாகக் கொண்டாடு வதுதான் இப்பெருவிழா. வடவள்ளி திரு-இராமலிங்கக் கவுண்டர் மகள் திருமதி மரகதம்மாளும் மற்றும் ஓர் அன்பரும் இதை நடத்துவதாகச் சொல்லப்படுகிறது.

கார்த்திகைமாதத்தில் கொண்டாடப்படும் கார்த்திகைத் தீபத் திருவிழாவில் பல்லாயிரக்கணக்கான அன்பர்கள் கலந்துகொண்டு மால்மருகனின் பேரருளைப் பெறுகின்றனர். அவர் அவர்களால் முடிந்த வரையில் விளக்கு எரிக்க நெய், வெண்ணெய், எண்ணெய் ஆகியவற்றைக் கொண்டு வந்து காணிக்கையாகச் செலுத்துகிறார்கள்.

ஆண்டு தோறும் சித்திரை மாதத்தில் கடைசி ஏழு நாட்கள், வைகாசி மாதத்தில் முதல் ஏழு நாட்கள், ஆகிய 14 நாட்கள் அக்கினி நட்சத்திர காலம் என்று சொல்லப்படும். அந்நாட்களில் மருதமலையானுக்கு அபிடேகம் செய்யப் படுகிறது. ஏலர்கலந்த தூயநீர், வாழைப்பழம், பசும்பால், நறுநெய், சர்க்கரை ஆகியவற்றால் செய்யப்பெற்ற பஞ்சாமிர்தம், பால், தேன், தயிர், இளநீர், சந்தனக்குழம்பு ஆகியவற்றால் முருகப்பெருமானைத் திருமுழுக்காட்டுவர். இவற்றுள் இளநீர் அபிடேகம் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

முற்காலத்தில் அரசர் பெருமக்கள் தங்களது, பிறந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள் என்றால், தற்காலத்தில் அரசியல் பெருந்தலைவர்களது பிறந்த நாளும் சீரிய முறையில் கொண்டாடப்படுகிறது. எனவே மூலமும் நடுவும் ஈறும் அற்ற முருகப்பெருமானது பிறந்த நாளை

அவன் அன்பர்கள் சீருடனும் சிறப்புடனும் கொண்டாடுவதில் வியப்பு ஏதும் இல்லை. அவனது பிறந்த நாளான வைகாசி மாதத்து விசாகநட்சத்திரத்தன்று பசும்பால் குடம்குடமாக அவனுக்குத் திருமுழுக்காட்டப்படுகிறது. 1929 ஆம் ஆண்டினின்று வடவள்ளி திரு. R. இராமலிங்கக் கவுண்டராலும், அன்னாரது மறைவிற்குப் பின் அவர் மகளான திருமதி. மரகதம்மாளாலும் பால்குடமுழுக்கு செய்யப்பட்டு வருகிறது. வடவள்ளி பிள்ளையார் கோயிலினின்றும் பால் குடங்களைத் திருப்புகழ்ப்பாடல்கள் முழங்க, இன்னிசைக் கருவிகள் ஒலிக்க, மருதமலைக்கு எடுத்துச்சென்று முருகப்பெருமானுக்குத் திருமுழுக்குச் செய்கிறார்கள்.

மாதாமாதம் விசாகநட்சத்திரத்தன்று அதற்கென்று உள்ள குழுவால் சிறப்பாக அபிடேகம் செய்யப்பட்டு வருகின்றது. ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியன்று துடியலூர் கவுண்டர்களால் அபிடேகம் செய்யப்படுகிறது. இவர்கள் சரவணப் பொய்கையினின்றும் குழாய்கள் மூலம் நீர் கொண்டுவருமுன் பச்சை மூங்கில் மூலமாக முருகப் பெருமானுக்குத் தூயநீர் அபிடேகத்திற்குக் கொண்டு வந்தார்கள். சீரிய முறையில் கொண்டாடப்பெறும் மாதாந்திரக் கிருத்திகையன்று கோவைவாழ் திரு. C. P. மாணிக்கம் என்பவரது உபயமாக முதல் அபிடேகம் செய்யப் படுகிறது. அன்னதானக் குழுவும், கிருத்திகைக் குழுவும் மருதாசலமூர்த்திக்குச் சிறப்பான அபிடேகம் செய்து, அடிவாரத்தில் உள்ள தங்கள் தங்கள் மடத்தில் அன்னதானம் செய்கிறார்கள். பங்குனி உத்திரத்திருவிழா கொண்டாடப் படுவதுடன் அந்த மாதம் கடைசி நாள் மருதமலையானை சந்தனத்தால், அணி செய்கிறார்கள். அடுத்த நாளாகிய தமிழ் வருடப்பிறப்பன்று அவன் தங்கமயில் வாகனத்தில் உலாவருகின்றான். மாதா மாதம் அமாவாசை நாளன்றும் அன்பர்கள் ஆயிரக்கணக்கில் கூடித் தங்கள் காணிக்கையைச் செலுத்துகிறார்கள்.

திருத்தணிகையில் ஆங்கில வருடப் பிறப்பன்று படிவிழா நடப்பது போன்று, இங்கு ஆகஸ்ட்மாதம் 15 ஆம் நாளன்று

(சுதந்திரதினவிழா) அன்னதானக்குழுவும், சனவரி மாதம் 26 ஆம் நாளன்று (குடியரசுதினவிழா) கிருத்திகைக் குழுவும் படி விழா நடத்தி வருகிறார்கள். அன்றைய நாள் மலைப்படிகள் ஒவ்வொன்றையும் தண்ணீரால் நன்றாகக் கழுவி, சந்தனம் குங்குமப்பொட்டிட்டு, தேங்காய் உடைத்துக்கற்பூரம் காட்டி மலைக்கு மேல் செல்கிறார்கள். அதன் மேல் மருதமலை உடையானுக்குச் சிறப்பாக அபிடேகம் செய்யப்படுகிறது. அந்நாட்களில் இன்னிசைக் கச்சேரிகளும் சொற்பொழிவு களும் நடைபெறுகின்றன.

கிருத்திகை, சட்டி, விசாகம் ஆகிய விசேடநாட்களில் மருதாசல மூர்த்திக்கு பஞ்சோபசார பூசை நடைபெறுகிறது. அபிடேகம், விரை, தீபம், அருச்சனை மற்றும் நைவேத்தியம் என்பன பஞ்சோபசாரமாம்.

அ) **அபிடேகம்:** வாழைப்பழம், பால், தேன், நெய், சர்க்கரை ஆகியவற்றாலான பஞ்சாமிர்தத்தால் முருகப் பெருமானைத் திருமுழுக்கு செய்தல்.

ஆ) **விரை:** இலேபனம், நறுமணம் என இரு வகைப் படும்.

1) **இலேபனம்:** என்பது பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ, கோரோசனை, புனுகு, அத்தர், சந்தனம் ஆகியவற்றைக் கந்தவேளின் திருமேனியில் பூசுதல்.

2) **நறுமணம்:** என்பது மல்லிகை, முல்லை, மருக் கொழுந்து, வெட்டிவேர் போன்ற மணம் மிக்க மலர்களால் செவ்வேளை அலங்கரித்தல்.

இ) **தீபம்:** வெள்ளி, வெண்கலம் ஆகிய உலோகங்களால் ஆன விளக்குகளில் பசுநெய் வார்த்து, பஞ்சாலான திரி யிட்டு, விளக்கேற்றி, உமை மைந்தன் முன் சுழற்றுதல்.

ஈ) **அருச்சனை:** ஆறுமாமுகனின் திருப்பெயர்களைக் கூறி மலர்களை அவன் திருவடிகளில் இட்டுப்பூசித்தல்.

**உ) நைவேத்தியம்:** அரிசி, நெய், சர்க்கரை ஆகியவற்றால் திருவமுது செய்து சேவற் கொடியோனுக்குப் படைத்தல்.

## கிருத்திகை, சட்டிவிரதம்

கார்த்திகை மகளிர் அறுவர் சரவணப் பொய்கையில் தோன்றிய ஆறுமா முகனுக்கு முலைப்பாலமுதம் ஊட்டி வளர்த்தனர். சிவபெருமான் அன்னை பராசக்தியுடன் அங்குவர, கார்த்திகை மகளிர் அவனைப் பணிந்து போற்றினர். அதுசமயம் அவன்,

''மகிழ்வால் எவரேனும்
நுந்தம் பகலிடை இன்னவன் நோன்றாள் வழி படுவோர்
தந்தம் குறை முடித்தே பரந்தனை நல்குவன் என்றான்''
[கந். 1-13-30]

அதாவது கார்த்திகை நாளன்று கார்த்திகேயனை வழிபடுவோருக்கு அவர்களது குறைகளைக் களைவதன்றி வீடுபேறும் அளிப்போம் என இறைவன் வரம் நல்கினான் என்பதாம். எனவே கிருத்திகை விரதம் முருகப்பெருமானுக்கு உகந்த ஒன்றாம்.

சூரபன்மன் முதலியோரை அழித்தது சண்முகனது அளக்கலாகாப் பேராற்றலை உணர்த்துவதால் சட்டிவிரதமும் அவனுக்கு என்று ஏற்பட்ட தனிச்சிறப்புடையதாகும். அமாவாசைக்குப் பின்வரும் சட்டி 'கறுத்த சட்டி' என்றும், பௌர்ணமிக்குப் பின்வரும் சட்டி 'வெளுத்த சட்டி' என்றும் கூறப்படும்.

முருகனுக்கு உகந்த இந்த இரு விரதங்களிலும் அவரவர் மனப்பக்குவம், உடல் நிலைக்குத் தக்கவாறு கடினவழிகளைப் பின்பற்றுவோரும் உண்டு; எளிய முறைகளைக் கடைப்பிடிப்போரும் உண்டு. குறிப்பாக அன்றைய நாள் காலையில் நீராடி, திருவெண்ணீறு அணிந்து, தம்வீட்டிலும், திருக்கோயிலிலும் சென்று செவ்வேளைப் பணிய வேண்டும். சூரியன் தோன்றுவது முதல் மறையும் வரை உண்ணாது

இருப்பது நலம். முடியாதவர்கள் பால், பழம் அருந்தலாம். அன்று முழுவதும் வீண் பேச்சுகளைப்பேசிக் காலத்தை அவமே போக்காது, முருகவேளின் புகழ் நூல்களான திருப்புகழ், சட்டி கவசம் முதலியவற்றை மனம் ஒன்றிப் படிக்க வேண்டும். மாலையில் நீராடி, மாமயிலோனுக்கு நைவேத்தியம் படைக்க வேண்டும். கிருத்திகை நாளன்று தேனும் தினைமாவும், வாழைத்தண்டும் பாசிப்பருப்பும் படைத்தல் நலம். அதற்குப்பின் விரதத்தை முடித்துக்கொள்ளலாம்.

---

# 9. பிற

## அன்பர்களுக்குச் செய்யப்படும் வசதிகள்

மருதாசலாதிபதியின் புகழ் பரவப் பரவ, இங்கு வரும் அன்பர்களின் எண்ணிக்கை நாடோறும் பெருகி வருகிறது. எனவே அவர்களுக்குப் பல வசதிகள் செய்யப்பட்டுள்ளன!

கோவை மாநகரினின்றும் மருதமலை சென்று வர, பேருந்து வசதிகள் நிறைய உள்ளன. பேருந்து எண்கள் 1, 1B, 1D, 1E, S12, S26, 67A, 76, 92, மற்றும் 02B ஆகியவை மத்தியப் பேருந்து நிலையத்தினின்றும், 1C, S13, S15, மற்றும் S15A ஆகியவை 'டவுன்ஹால்' வழியாகவும் மருதமலைக்குச் சென்று வருகின்றன. மேலும் மருதமலை அடிவாரத்தில் சேரன் போக்குவரத்துக் கழகம் பேருந்து நிலையம் ஒன்று அமைக்க உள்ளது.

இங்கு வரும் அன்பர்கள் தங்குவதற்கு வசதியாக அடிவாரத்தில் கோயில் நிர்வாகத்தால் தங்கும் இல்லம் கட்டப் பட்டு முடியும் நிலையில் உள்ளது. இதில் ஒரு புறத்தில் மக்கள் வேண்டிய பொருள்களை வாங்க அங்காடிகளும், மற்றொரு புறத்தில் 12 தங்கும் அறைகளும் உள்ளன.

அடிவாரத்தினின்றும் மலைப்பாதை வழியாக மலையை அடைய, கோயிலினின்றும் 2 சிறிய பேருந்துகளும் 1 வேனும் விடப்படுகின்றன.

குடிநீர் வடிகால் வாரியம் மூலம் கோயில் நிதியினின்றும் ரூ 5. 68 இலட்சம் செலவில் சிறுவாணி நீர் அடிவாரத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளது. அன்பர்கள் நன்கொடையாக வழங்கிய குழாய்கள் மற்றும் மின் இயந்திரங்கள் மூலம் 1986 ஜூலை முதல் மலைமேல் குடிநீர் தங்கு தடையின்றிக் கிடைக்கிறது. மேலும் கோயிலின் நேரடிப் பார்வையில் தரமான பிரசாதங்களும், பஞ்சாமிர்தமும் செய்யப்பட்டு, நியாயமான விலையில் கோயில் நிர்வாகமே அன்பர்களுக்கு விற்பனை செய்து வருகிறது.

அன்பர்கள் திருக்கோயிலில் ரூ. 1000/- செலுத்தினால், அது வங்கியில் முதலீடு செய்யப்படுகிறது. அதன் மூலம் கிடைக்கும் வட்டியைக் கொண்டு குறிப்பிட்ட அன்பர் விரும்பும் நாளில் முருகப்பெருமானுக்குச் சிறப்பு அபிடேகம் செய்யப்பட்டு, பிரசாதம் தபால் மூலம் அனுப்பப்படுகிறது. ரூ 30/- செலுத்தினால், ஓர் ஆண்டுக்குக் கிருத்திகை அன்று மருதாசலமூர்த்திக்கு அர்ச்சனை செய்யப்பட்டு, பிரசாதம் தபாலில் அனுப்பப்படுகிறது. ரூ 75/- கட்டணம் செலுத்தினால், முருகப்பெருமான் தங்கமயில் மீது உலாவி வருவதைக் காணலாம். சைவத்தையும் தமிழையும் இரு கண்கள் எனப்போற்றி 60 ஆண்டுகளுக்கு மேல் தொண்டாற்றி வரும் திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்திற்கு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையும் கோயில நிர்வாகமும் குறைந்த வாடகையில் புத்தக நிலையம் நடத்த அனுமதி அளித்துள்ளது பாராட்டத்தக்கது. இதனால் அன்பர்கள் தங்களுக்கு வேண்டிய சமய நூல்களையும் ஏனையவற்றையும் வாங்க வசதி ஏற்பட்டுள்ளது.

### சமூகப் பணிகள்

பண்டைநாட்கள் தொடங்கி திருக்கோயில்கள் இறைவனை வணங்கும் தூய இடங்களாக மட்டும் இருக்கவில்லை; அவை

கல்விக்கூடங்களாகவும், உடல் பிணிதீர்க்கும் மருந்தகங்களாகவும், இசை, நடனம், ஓவியம், சிற்பம் ஆகிய நுண்கலைகளைப் பேணி வளர்க்கும் கலைக்கூடங்களாகவும், மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் நிறுவனங்களாகவும் திகழ்ந்து வருகின்றன. அவை மக்களது வாழ்க்கையில் பயன்படும் துறையாக விளங்கி மக்களாட்சிக்கு முன்னோடிகளாகத் திகழ்ந்து விளங்கின. கோயில்கள் இன்றேல் நாகரிகம் இல்லை. காட்டுமிராண்டி வாழ்க்கைதான் இருக்கும். எனவே, அந்நாளைய நாகரிகம் "கோயில் நாகரிகம்" என்று அழைக்கப்பட்டது. இதைத்தான் அப்பர் பெருமான் "திருக்கோயில் இல்லாத திருவில்ஊரும்...ஊரல்ல, அடவிகாடே" என்று தமது 'தனித்தாண்டகத்தில்' பாடி அருளியுள்ளார். இது பற்றியே "கோயில் இல்லா ஊரில் குடி இருக்கவேண்டா" என்ற முதுமொழி தோன்றியது எனலாம்.

இப்பெருமை மிகு மரபினையொட்டி மருதமலைக் கோயிலும் மக்களுக்கு ஆக்கப்பணிகள் பல ஆற்றி வருகின்றது:

"இன்னறுங் கனிச்சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்
அன்னயாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்து அறிவித்தல்"

என மகாகவி பாரதியார் கல்வி கற்பிப்பதன் சிறப்பை வெகு அழகாகவும், ஆணித்தரமாகவும் எடுத்துக்கூறியுள்ளார். மக்களிடையே கல்வி அறிவைப்பரப்ப 7.03 ஏக்கர் நிலப் பரப்பில் கோயில் நிதியினின்றும் ரூ 1/- இலட்சம் அறக்கட்டளைத் தொகையாக அரசுக்குச்செலுத்தி, வடவள்ளி கிராமத்தில் 22-7-71 முதல் உயர்நிலைப்பள்ளி ஒன்று நடத்தப்படுகிறது. மேலும் கோயில் நிதியினின்றும் ரூ 4/- இலட்சம் செலவில் வகுப்பறைகள் கட்டப்பட்டுள்ளன. இங்கு 474

மாணவர்களும் 335 மாணவிகளும் கல்விகற்று வருகின்றனர். 23 ஆசிரியர்கள் பணி ஆற்றி வருகிறார்கள். இன்றைய சூழ் நிலையில் வாழ்க்கையை நடத்தத் தொழிற்கல்வி மிகவும் இன்றியமையாததாகி விட்டது. எனவே கோயில் 'பாலி டெக்னிக்' ஒன்றை நிறுவ முயற்சி செய்வதாகத் தெரிகிறது.

''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' என்பது முதுமொழி. பிணியாளர்களின் பிணிகளை நீக்கிக் குணமாக்க 13-4-76 முதல் வடவள்ளியில் ஒரு சித்த மருத்துவமனை கோயில் நிர்வாகத்தால் நடத்தப்பட்டு வருகிறது. ஆண்டு ஒன்றுக்கு மருந்து வகையில் ரூ 30,000/- செலவழிக்கப்படு கிறது. இதனால் 36,000 பேர்கள் ஆண்டு ஒன்றுக்குப் பயன் அடைகிறார்கள். மேலும் கோயில் நிதியினின்றும் ரூ1-50 இலட்சம் செலவழித்து சித்தமருத்துவமனைஒன்று கட்டவும் திட்டமிடப்பட்டுள்ளது. விசேடநாட்களில் மக்கள் ஆயிரக் கணக்கில் மருதமலையானை வணங்க வருகிறார்கள். அந்த நாட்களில் தேவைப்பட்டவர்களுக்கு மருத்துவ வசதி அளிப்பதற்காக சித்த மருத்துவர் திருக்கோயிலுக்கு வருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

பெற்றோர்கள் அற்ற, ஆதரவு இல்லாக்குழந்தைகளுக்குத் தக்க கவனிப்பு இன்றேல், அவர்களது வாழ்க்கை சீர்குலைய வாய்ப்புகள் நிறைய உண்டு. அத்தகைய குழந்தைகளைக்காக்க வேண்டியது சமுதாயத்தின் பெரும் பொறுப்பாகும். வடவள்ளியில் கோயில் நிர்வாகத்தில் 2-6-75 முதல் அன்பு இல்லம் ஒன்று நடத்தப்படுகிறது. இதில் 150 குழந்தைகள் வரை பராமரிக்க வசதி உள்ளது.

**பூசை**

இந்தக் கோயிலில் 5 காலம் பூசை நடைபெறுகிறது; அவையாவன :

| | |
|---|---|
| திருப்பள்ளியெழுச்சி | காலை 5. 30-6 |
| காலை சந்தி | 8. 30-9 |

| | |
|---|---|
| உச்சிக்காலம் | 12 |
| சாயரட்சை | மாலை 5.30-6 |
| அர்த்த சாமம் | இரவு 8. 30 |

உச்சிக்காலத்தில் 1 மணி முதல் 2 மணி வரை கோயில் திருக்கடைக்காப்பு செய்யப்படுகிறது. விசேட நாட்களில் கோயில் திருக்கடைக்காப்பு செய்யப்படுவதில்லை.

பாம்பாட்டி சித்தர் சமாதியில் காலை, மாலை இரு வேளைகளில் பூசை நடைபெறுகிறது.

நிர்வாகம்;

கோயில் அலுவலகத்தில் 45 ஊழியர்கள் பணிபுரிகின்றனர். இவர்களன்றி, குருக்கள் போன்றோர் 30 பேர்கள் உள்ளனர். இந்து சமயஅறநிலைய ஆட்சித்துறையைச் சார்ந்த இரு அலுவலர்கள் அலுவலகக் கண்காணிப்பாளராகவும், உள்துறைக் கண்காணிப்பாளராகவும் பணி புரிகிறார்கள். உதவி ஆணையர் நிலையில் ஒருவர் நிர்வாக அலுவலராக உள்ளார். தற்போது திருமிகு A. வெங்கடாசலம் பி. ஏ. என்பவர் நிர்வாக அலுவலராகச் செயலாற்றி வருகிறார். திருமவி K. முருகேசன் என்பவர் தமிழக அரசால் தக்காராக நியமிக்கப்பட்டு உள்ளார்.

கோயில் வருமானம் ஆண்டு ஒன்றுக்குக் கீழே குறிப்பிட்டபடி சுமார் ரூ 30/ இலட்சமாகும்:—

| | |
|---|---|
| உண்டியல் வருமானம் | ரூ 9. 00, 000 |
| கட்டணச் சீட்டுகள் விற்பனை | ரூ 6, 00, 000 |
| கடைகள் வைத்து வியாபாரம் செய்யும் உரிமம் | ரூ 6, 00, 000 |
| மலைச் சாலையில் வாகனங்களுக்குச் சுங்கம் | ரூ 1, 50, 000 |
| உபயகால நடை மற்றும் பல வகை விற்பனை | ரூ 1, 50, 000 |

| | | |
|---|---|---|
| பேருந்துக் கட்டண வசூல் | ரூ | 4,00,000 |
| முதலீடுகளின் பேரில் வட்டி | ரூ | 1,15,000 |
| உபயகாணிக்கைகள் | ரூ | 35,000 |
| நிலக் குத்தகை | ரூ | 6,000 |
| | | ரூ29, 56,000 |

ரூ. இருபத்தொன்பது இலட்சத்து ஐம்பத்தாறாயிரம்.

**வேண்டுகோள் :**

"மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையாய்த் தொடங்கினர்க்கு ஓர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே" (156)

என்ற தாயுமான அடிகள் குறிப்பிட்ட மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகைச் சிறப்புகள் உடைய மருதமலைத்திருக்கோயிலைக் காண்போர் உள்ளங்கவரும் எழிலுடனும் பொலிவுடனும் அமைக்கப் பெரியதொரு திட்டம் தீட்டி செயல்பட்டு வருகிறது. எனவே,

"நிதி மிகுந்தவர் பொற்குவைதாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவும் அற்றவர் வாய்ச் சொல் அருளீர்
ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்
.................. ...
எதுவும் நல்கி இங்கு எவ்வகையானும்
இப்பெருந்தொழில் நாட்டுவம் வாரீர்"

என மகாகவி பாரதியார் அறைகூவி அழைத்தபடி, முருகவேளிடம் பேரன்புகொண்ட ஆன்றோர்களும் சான்றோர்களும் தங்களால் இயன்ற அளவு பொருளுதவியையும் ஏனைய உதவிகளையும் செய்து, அவனது பெருங்கருணையைப் பெற்று உய்யுமாறு வேண்டிக்கொள்ளப்படுகிறார்கள்.

———

# 1. மருதாசலக் கடவுள் பதிகம்

## ஆசிரிய விருத்தம்

அன்னைநீ தந்தைநீ யாதிசற்குருவுநீ
யருவுநீ யுருவுநீயே
அனலுநீ புனலுநீ மனமுநீ யுணர்வுநீ
யைம்பத்தோ ரக்கரமுநீ
பன்னு சதுமறையுநீ யறுபத்து நாற்கலைப்
பயனுநீ யயனுநீயே
பதியுநீ கதியுநீ வெளியுநீ யொளியுநீ
பாரிற் சராசரமுநீ
என்னையா னடிமைகொண் டாள்பவனு நீயன்றி
யின்னுமொரு தெய்வமுளதோ
எம்பிரா னேயமரர் தம்பிரா னேபேதை
யேழைக் கிரங்கு கண்டாய்
வன்னமிகு மரகதத் தோகையின் புரியனே
வந்தெமைக் காத்தருளுவாய்
மணிமாகுணப் படலை யணிவேணி யத்தரருள்
மருதாசலக் கடவுளே.

ஆதிபரமேஸ்வரி பராபரி புராதனிசொ
லாறுமுக மானபரனே
ஆனைமுக மாறுணைவனே குறமினாள்மகிழ
வாகுறுமுந் நாலுகரனே
ஓதியசரோரு கநண்பாசவரியோ மெனமுன்
னோதுபொரு ளேதெனவுமே
ஓலமிடவே யடிசெய்தே சிறையிலே விடுசு
வோதியவை வேன்முருகனே
ஏதுமறியாத சிறியேனுனது பாத கமல
ரேவல்செயு மான்மையடியேன்
ஏழையினையாள் வதெதுநாள் செலுமதொமயிலி
னேறிவிளை யாடுமரசே

மாதவமுராரி மருகேசவ மரேசர்பணி
　　மாமருவுநீர் முடியினாய்
மணிமா சுணப்படலை யணிவேணி யத்தரருள்
　　மருதாசலக் கடவுளே.

கனகநவரத்நக் கிரீடமாடக் குழைக்
　　காதுபனி ரண்டுமாடக்
கருணைபொழி யோராறு மதிவதன மாடவே
　　கதிர்திலக நுதலி லாட
பனகசெம்பணி வடங் கண்டிகை கடம்பொடு
　　பதக்கங்கண் மார்பி லாடப்
பன்னிரு கரங்கடனில் வேலுமா டக்கமல
　　பாதச் சதங்கையாடத்
தினகரனை யெதிர்வரக் கூவும்பிர சண்டநற்
　　சேவற் பதாகை யாடத்
தேவரோடு முனிவர்கள் புகழ்ந்துகொண் டாடச்
　　சிகண்டியி னிவர்ந்து வந்தென்
மனதுதனி லிருளகல வல்வினையகற்றிநல்
　　வாழ்வுதந் தெமை யாளுவாய்
மணிமா சுணப்படலை யணி வேணி யத்தரருள்
　　மருதாசலக் கடவுளே.

—கெட்டி முத்துப் புலவர்

---

## 2. மருதாசலக்கடவுள் அலங்காரம்

### அலங்காரம்

காப்பு

(கட்டளைக் கலித்துறைகள்)

சிலங்கா ரனைய குழன்மீ தணியுந் திருவனையார்
குலங்கா ரனைய மயில்போ னடனங் குயிற்றிசைசால்
வலங்கா ரகன்புகழ்ந் தேத்துமருத வரைக்குகன்ற
னலங்கார நல்கு மிராமானந்தன் பொன் னடித்துணையே

## நூல்

நேசத்து வந்து தினம்பேணு மன்பினர் நெஞ்சகத்தே
பாசத்து வந்துவஞ் சேராம லாண்டிடும் பண்பினவான்
மாசத் தவப்பெரி யோரேத்துஞ் சீர்கொண் மருதவெற்பில்
வாசத் துனவன் மருகோன் திருவடி வாரிசமே.

திருவளிக் கும்பெருங் கல்வியு நல்கிடுஞ் சேணுலகார்
தருவளிக் கும்பத மியாவையு மீந்திடுந் தல்லனைய
வுருவளிக் குந்தொண்ட ரெண்ணிய யாவு முடனளிக்கு
மருவளிக் கும்பொழில் சூழ்மரு தாசலன் வண்பதமே.

சும்மா விருசொல் லறவென்று நீமுனஞ் சொற்றலுமே
யம்மா பொருளொன் றுமறிந்திலனெ னருணையெங்கோன்
விம்மா னந்தானு பவஞ்சிறியேற்கு விளக்கிடுவாய்
கைம்மா வுலவும் பொழின்மரு தாசல காரணனே.

திசையாறு மேமுக மாய்ச்சம யங்க டிருப்புயமா
யிசைவேத வாகம நிச்சயந் தாள்க ளிரண்டெனக்கொண்
டசையாப் பரந்தண்ட மேந்துகைத் தேசிக னாமுருவாய்
நசைதோ வடியர் தொழமரு தாசல நண்ணியதே.

## 3. சந்தப்பதிகம்

தனதான தத்ததந்த தனதானா

விரையார்சி வத்தகஞ்ச மலர்மீதி ருக்கைகொண்ட
வியனான்மு கத்தனங்கை வரைமாணா
விதியேப லத்ததென்று பெருவாதி யற்றுகின்ற
விபரீத ருட்கழன்று மடியாதே

கரைநீர்ம றைக்குவங்க ளறியாதொ ளித்திலங்கு
கவினாறு னற்பதங்க ளகலாதே.
கருதோகை பெற்றதொண்டர் வதிசேக ரத்தடைந்து
களிகூர்ந லத்தையென்று தருவ ரயோ

திரைசேரு டற்பொருந்து முதியோனெ னத்தளர்ந்த
திருமேனி யைக்கொடொன்றும் வலியேதோய்
சிலைவேடர் பெற்றமங்கை தருதேனி டைக்கலந்த
தினைமாவி லிச்சை மிஞ்சி நுகர்வோனே;

மரைநே ருணர்ச்சிகொண்டு திரிவேனெ னைப்பொருந்து
மயலோடி டச்சிவந்த குருவாவாய்;
மழைநேர்ம யிற்குலங்க டினமாடி டச்சிறந்த
மருதாச லத்தமர்ந்த பெருமாளே;

—சிரவணபுரம் கந்தசாமி சுவாமிகள்

---

## 4. மருதாசலக்கடவுள் பிள்ளைத்தமிழ்

கோல மருப்பி னுயிர்த் தமுத்தங், குருதி நிறுத்த செஞ்சாலிக்,
குலைவீழ் முத்த மரிநிறத்த, கொடுநா வரவந்தரு
முத்தம்,

நீலநிறத்த முடங்கன் முத்த, மாலி நிறத்த வேழ முத்தம்,
நிரை சேர் மாடப் புறவின் முட்டை, நிறத்த வானிற்
படர்மேக,

சாலங் குவித்த முத்தமொளிர், சவிதா னிறத்த தென
மேலோர், சாற்ற வறிந்தார் நினதுமுத்தந், தனக்கீண்டு
வமை வகுத்தறியார்.

மாலு மயனும் புகழ் மருத, வரைவேண் முத்தந் தருகவே,
வல்லியி ரண்டு படர் நிழலின், வாழ்வே முத்தந்
தருகவே.

முத்தப் பருவம்—2;

படியார் படிதீர் புலனெறியே, படியா தவரு மயனோடம்,
பரவும் பாரம் பிரர்பீதாம் பரரும் பரவிப் பரவுதல்
செய்,

கடியார் கடிசேர் குரவலர்ந்த கழலார் கழலாய் பன்னிரு கட்,
கரும்பே கரும்பே யுங்கொடியுங் கழுவுங் கழுவ வயிற்
றழலை,

கொடியார் கொடியா ரந்தோவெட் குறையுங் குறையா
ரெனஞாலங், கூறுங் கூறு மசுரர்களுங் கூறு கூறாய்ப் பட
முனைவேன்,

முடிவிற் கடவு மருதவரை, முத்தே வருக வருகவே, முளரி
யிறையைச் சிறைபுகுத்து, முதலே வருக வருகவே.

வாரானைப் பருவம்—3.

வாழி - வெண்பா

மருதவரை வாழியங்கண் வாழ்குமரன் வாழி
வருமயில்வேல் சேவல்கிள்ளை வாழி—பொருவி
லருச்சகர்மெய் யன்பரிவை யன்புடனோ துற்றோர்
திருச்சமைந்து வாழி தினம்.

—வித்துவான் அருணாசலக் கவிராயர்

---

# 5. திருத்துடிசைப் புராணம்

## ருதாசலபதி துதி

கருதமலை சிவபெருமான் கண்களிக்க விளையாடிக்
கலங்கா வெஞ்சூர்
பொருதமலை யடக்கிமுனம் புரந்தரற்கு முடிசூட்டிப்
புடைசூ ழன்பர்க்
கொருதமலை வகற்றிவர முகந்தளித்துச் சகந்துதிக்க
வோங்கு செல்வ
மருதமலை வீற்றிருந்த வடிவேற்கைக் குகன் மலர்த்தாள்
வணக்கஞ் செய்வாம்.

## கிரிச்சருக்கம்

உரைபுரி வெள்ளிக் குன்றினுத்தர ஞாங்கர்த் தோன்றித்
திரைகட லுகுத்த பாரெண்டிசை விசும் பெவையு முய்யப்
புரைதபு வடிவேற் செங்கைப் புனிதனை யினிது தாங்கி
மரைவரு வளமைபெற்று மருதமால் வரையொன் றோங்கும்;

மழைமுகில் வறந்த ஞான்றிம் வற்றுறா தனைய தீர்த்தம்
தழைதரு புனல தேனுந் தனையடைந் தவர்வெம் பாவப்
பழையபஞ் சசலத்திற்கோர் பருநெருப் பெனலா மென்ன
விழையினு மினிது நல்கு மேதினி வியப்ப மாதோ.

———

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின்

# 6. மருதமலைப் பாடல்கள்

## 1. திருப்புகழ்

தனனதனத் தானன தானன - தனதானா

அறிவறுதுற் சாதன னேநிகர்
கொடியவரைப் பாடியெ னேரமும்
அவர்பிறகிற் போயுழல் பாழ்வினை-அணுகாதே

அகிலமதற் கோரர சாயினும்
ஒருகடுகொப் பாயினும் ஈகையில்
அசடர்களைப் பேணுநர் வாய்மொழி-வினவாதே

பிறிதிணையற் றாருல கோர்மிசை
அருள்பெருகிப் பாடிய நூல்மொழி
பிழையெனவிட் டாரென வீணினில்-மடியாதே

பிணிமுகமற் றோகையின் நீழலில்
அயிலணிகைச் சீர்முத லாவன
பெரிதிலகக் கூவிய போதெதிர்-வருவாயே

குறிபகர்சொற் கோமள வேடமின்
எதிரொருகைக் கோலொடு போய்வரு
குணமதனைப் பேசிடு வாரொடு-திரிவோனே

குகுகுகுக் கூவென ஒலிடும்
ஒருதவளச் சேவலும் வான்மலர்
கொணரும்எழிற் சாருவும் மேவிய-புயவேளே

மறியணிகைத் தேசிகர் தீவிழி
அதனில்உதித் தாணவ நோய்மிக
மலியுமடற் றானவர் வேரற-முனிவோனே

வளமலிவுற் றாயிர மாதவர்
திருவருள்பெற் றாடிடும் விறுறு
மருதமலைக் கோவிலின் மேவிய-பெருமாளே.

இடும்பன் - வெண்பா

மருத மலையிடும்பா வம்புசெய வேண்டாம்
ஒருபலியும் நீஏற்க ஒண்ணா(து) அருள்மகிமைச்
செவ்வே ளடிமைத் திறமுடையார்க்(கு) ஊன்ஆமோ?
இவ்வேளை யீதுரைத்தேன் யான்.

வேலுமயிலுந் துணை

———

குறிப்புரை :—

விட்டார் என - விட்டவரைப்போல. பிணிமுகம் - யானை யென்பர் நக்கீரர் ஆற்றுப்படையில், முருகன் மயிலுக்கும் அப்பெயர் உண்டு. தவளச்சேவல் - வெண்ணிறச் சேவல், செந்நிறச் சேவலும் உண்டு, சாரு—கிளி. அருணகிரிநாதர் பாரிசாத மலர் கொணர்ந்த வரலாற்றோடு கூறுவதாலறிக. மறி — மான்.

தண்டபாணி சுவாமிகளின்

## 7. மருதமலை—தான்தோன்றி விநாயகர் பதிகம்

மன்றைப் புரப்பார் மகனே ; மருதநெடுங்
குன்றைப் புரக்கும் குகன்துணையே—என்றைக்கோ
உன்னருட்பே றெய்தி உலகமுய்யச் செய்யும்நன்னாள் ?
இன்னதினம் என்றுரைப்பா யே.

நூல்

கொச்சகக் கலிப்பாக்கள்

மிக்கதமிழ்ப் புலவர்பலர் மேன்மேலும் போற்றிசைக்கத்
தக்கபுகழ் மருதமலைத் தான்றோன்றிக் கணபதியே!
கொக்கனைய வஞ்சகத்தோர் குலைகுலைய விளையாடி
இக்கலியை வென்றிடுவ(து) என்றைக்கோ அறியேனே. 1

பன்னகப்பூண் அணிவார்தம் பாலனெனப் பழிச்சுநர்க்கும்
மன்னர்புகழ் பேறளித்து மருதமலை வாழ்களிறே!
புன்னரகிற் கஞ்சாமற் புகலரிய சினங்கொள்வேன்
இன்னல்ஒழித் தாண்டருள்வ(து) என்றைக்கோ அறியேனே. 2

பூமாரி பொழிந்தமலர் புகழ்ந்திறைஞ்சப் பூட்கைமுகன்
மாமாயம் தவிர்த்தருளும் மருதமலை வாரணமே
பாமாலைப் புலவர்பலர் பரிசெண்ணிப் பரதவிப்பேன்
ஏமாற்றந் தீர்த்தருள்வ(து) என்றைக்கோ அறியேனே. 3

மையாரு மிடற்றானும் மாதவனும் மலரோனும்
செய்யார்வங் கொடுமருதத் திருமலைவாழ் சிந்துரமே!
கையார்தண் மலர்வாளிக் கரியமதன் சினந்தென்மேல்
எய்யாமற் போயொழிவ(து) என்றைக்கோ அறியேனே. 4

திசைத்தலைதோ றவிர்ந்தபுகழ்த் திருமருத மலையிடத்தில்
அசைத்தசெவித் துணைகாட்டும் அணிவரைஒத் தவிர்வானே!

வசைத்தமிழும் புகழ்ந்தோதும் வண்தமிழும் வாய்திறந்(து)
யான்
இசைத்தபடி யேபலிப்ப(து) என்றைக்கோ அறியேனே. 5

பொன்னார்செம் புகர்முகத்துப் புனிதனே பொருளென்னச்
சொன்னார்கண் டுவப்பெய்தித் தொழமருத மலைநின்றாய்!
பன்னாகத் தலைதாங்கும் படியிடத்துள் ளார்பலரும்
என்னாணைப் படிநடப்ப(து) என்றைக்கோ அறியேனே. 6

ஒன்றைக்கொன் றலதுண்ணார்க்(கு) உறுகண்மிகச்
செயவேண்டிக்
குன்றைக்கொள் வான்துணையாய்க் குளிர்மருத வரையுற்றாய்
நன்றைத்தந்(து) அடியவர்தம் நடுவிருத்தி எனையாள்வ(து)
இன்றைக்கோ நாளைக்கோ என்றைக்கோ அறியேனே. 7

பொருநையொடு காவிரியும் பூதலத்துண் டாக்கி, எழில்
மருதமலை யிடைமுளைக்கும் வாரணமா முகத்தெந்தாய்!
மருமலிபைங் குரற்காட்டு மானனையார் மயல்மீறும்
இருள்கெடுத்துன் அருள்கொடுப்ப(து) என்றைக்கோ
அறியேனே. 8

வேடமகள் இச்சையின்னும் விறற்றுணைவன் கொளுமென்னக்
கூடமரு தாசலத்திற் குடியிருக்கும் குஞ்சரமே!
நாடனைத்தும் பெரிதேச நாயினேன் றனைச்சூழும்
ஏடணைமூன் றையுந்தீர்ப்ப(து) என்றைக்கோ அறியேனே. 9

வள்ளுவன்முற் பிறந்தாட்கு வழங்கியமெய் யருள்வாழ்க்கை
நள்ளுமறி வெனக்கீந்து நன்மருத மலையுற்றாய்!
தெள்ளுதமிழ்க் கவியின்பம் நெறிதேனும் அறியாதார்
என்னும்இழி வறக்களைவ(து) என்றைக்கோ அறியேனே. 10

வளமருவு மாமருத மலையினிடம் வடிவேற்கை
இளவலொடு வாழ்வானை என்றைக்கோ அருள்வாயென்(று)
உளம்உருகித் திருநெல்லை யூர்உடையன் துதிக்குமிவை
களவகன்ற நெஞ்சினர்க்குக் கருதியசீர் தருமன்றே. 11

———

தண்டபாணி சுவாமிகளின்

# 8. மருதமலைக் குமரக் கடவுள் பதிகம்

வல்ல மருத மலைக்குமரன் வாஞ்சைகொள்ளும்
நல்ல பதிகமொன்று நல்குவான் — எல்லவரும்
முற்போற்றும் ஆனை முகத்தாதி மூர்த்திமுன்பு
நிற்போம் மலர்த்தாள் நினைத்து.

நூல்

அறுசீர்ச் சந்த விருத்தங்கள்

தனதன தத்தன தானனா தனதன தத்தன தானனா

அயிலைநி னைத்தறி யார்கள்போல்
அளவில்க லிப்பிணி மீறலால்
வெயிலினி டைப்புழு ஆகினேன்
விழியெதிர் உற்றருள் ஈகுவாய்!
குயிலினம் வெட்குரை கூறுமோர்
குறமகள் அத்திமி னாளொடோர்
மயில்முது கிற்றிகழ் சேவகா
மருமத லைக்கும ரேசனே. 1

அருணைந கர்க்கிளி தானெனா
அடிமையி னைப்பல காலும் ஓ(து)
ஒருவன்உ னக்கய லாகுமேல்
உயர்மறை உச்சிமெய் ஆகுமோ?
சருவப ரத்துவம் ஆகினாய்
தவளநி றக்களி(று) ஏறுவாய்
மருமவி செச்சைகொள் மாலையாய்
மருதம லைக்கும ரேசனே. 2

அனகநெ றிக்கிடை மேயினார்
அலமரு தற்றெரி யார்கள்போல்
உனதருள் உற்றிடல் நீதியோ
உரிமைவி ளைத்தெனை ஆளுவாய்!

பனகமி தித்தவிர் தோகையாய்
பவளவ ரைக்கிணை ஆகுவாய்!
வனசன்அ ழக்கறு வாண்மையாய்
மருதம லைக்கும ரேசனே. 3

அறிவரும் அற்பர்கள் வாயில்தோ
றலையவி டுக்கும்அ நீதிபோய்
எறிமழு வைத்தவர் காதிலோ(து)
இணையில்பொ ருட்டரும் நாளெதோ
குறிபகர் சத்திம னோரதா!
குளிர்வரை முற்றிலும் மேவுவாய்
மறியைந டத்தும்வி னோதனே
மருதம லைக்கும ரேசனே. 4

இதமொழி செப்புகி லார்களால்
இடையும்இ யற்புல வோரெலாம்
மிதமில்உ வப்புறல் காணவே
விழையுமெ னக்கரு ளாய்கொலோ?
சதமகன் மெய்த்தவ மே! எனோர்
தமறிய அத்திம ணாளனே!
மதன்மகிழ் மைத்துநன் ஆனவா
மருதம லைக்கும ரேசனே. 5

இயல்கொடு மெச்சிய பாவலோன்
இருள்குகை விட்டுய நீமுனாள்
செயல்கரு திப்புகழ் வேன்இநாள்
சிறுமைப டற்றவி ராய்கொலோ!
கயல்விழி உத்தமி பாலகா!
கரிமுக வற்கொரு தோழனே
மயல்வரை யைப்பொரும் வேலவா
மருதம லைக்கும ரேசனே. 6

தினகரன் முற்றமி யேன்ஓர்நாள்
திருமலை யுச்சியில் ஏறியே
மனதுவெ றுத்தவண் வீழில்ஏன்
மரணம வித்திலை ஓதுவாய்!

கனகச பைப்பர மேசனார்
கனல்விழி யிற்பொறி யானவா!
வனசர ருக்கும்ஓர் தாயக
மருதம லைக்கும ரேசனே. 7

சதுமுக வித்தகன் ஆதிநாள்
தலையில்வி தித்திடல் தீயதேல்
அதுநின்ம லர்க்கழல் தோய்வதால்
அழியும்என் நிச்சயம் நான்விடேன்
விதுநிகர் மெய்த்திரு நீறிடார்
விரைவில்மு னைக்கழு வேறவே
மதுரையி னிற்கவி பாடினாய்
மருதம லைக்கும ரேசனே. 8

கடலின்மு ளைத்தெழு மாவின்வேர்
களையும்அ யிற்படை மீதுபூ
இடவல பத்தரை யேசுவார்
இனமழி யப்புரி யாய்கொலோ
நடனம யிற்பரி ஆதியா!
நறியத மிழ்க்கவி மாலையாய்!
மடமக ளிர்க்கொரு மோகனாம்
மருதம லைக்கும ரேசனே. 9

அயன்அரி ருத்திரன் ஆதியோர்
அனைவரு மெச்சிய வேலனே
இயல்மது ரக்கவி ஆசையான்
எனுமெய் ஒளித்துறல் ஆகுமோ
புயலினம் வெட்குறும் ஈகையாய்
புகழில் விருப்புறும் ஓகையாய்!
வயமலி குக்குட வாகையாய்
மருதம லைக்கும ரேசனே. 10

பிழைகள்மி குப்புரி தீமைதீர்
பெருமைபெ றக்குரு வாகிநீ
பழையபி றப்பது தான்எனோர்
பரிசுத வத்தகும் நாள்எதோ

உமைமக ளைத்தொழும் வேடுவா
உருகும னத்தில்நி லாவுவாய்
மழைமுகில் விட்டக லாததாம்
மருதம லைக்கும ரேசனே. 11

கரியநி றத்தின தாகியே
கமலையி னைப்புனை பான்மையால்
வரியர விற்றுயில் வானைநேர்
மருதம லைக்கும ரேசன்மேல்
அரியதி ருப்புகழ் பாடும்வாய்
அமையும்அ டற்கவு மாரனோர்
தெரியலெ னப்புகல் பாடலே
தினமும்உ ரைப்பவர் சிலரே.

———

காப்பு:- நல்குவான்—நல்கும் பொருட்டு......... சிற்போம் என்பதாம்.

2. தவளநிறக்களிறு — திருஞான வேழமென்ற யானை. முருகனுக்குரியதாய் வெண்ணிற முடையது. செச்சை— வெட்சிப்பூ.

3. பணகம்—பாம்பு—வனசன்—பிரமன்.

4. சத்தி—வள்ளி, மறி—ஆடு.

5. சதமகன்—இந்திரன். அத்தி—தெய்வயானை.

6. பாவலோன்—நக்ரேர். மயல்—இச்சைமலை போலுள்ளவன்.

7. தினகரன் — சூரியன். விழில்—உருண்ட சமயம், வனசரர்—வேடர்.

8. கவிபாடினாய்—சம்பந்தராக வந்த திருவிளையாடல்.

11. உமைமகள்—மானிடம் உதித்த வள்ளிநாயகி.

12. தெரியல்—மாலை.

தண்டபாணி சுவாமிகளின்

## 9. தண்டபாணிக் கடவுள் தோத்திரப் பதிகம்

மஞ்சடரும் சோலை மருதமலை வாழ்குமரன்
செஞ்சலசத் தாளிணையிற் சேர்ப்பிக்க—நெஞ்சமையப்
போற்றுதிக் கேற்றதுணை பொற்பார்தான் தோன்றி முன்னோன்
மாற்றுந்து பொற்சே வடி.

### நூல்

### எழுசீர் விருத்தம்

அறுமுகம் புயமி ராறுடன் பிறவும்
அமையுநின் பேருருக் கருதப்,
பெறுதவ மில்லேன்; தண்டுவே லணிந்து
பிறங்குநின் தெரிசனந் தருவாய்.
குறுமுனி பரவத் தமிழிலக் கணமுன்
கூறிய குருபரா குகனே!
மறுவில்சி ரடியார் வருமெழில் மருத
மால்வரைத் தண்டபா ணியனே! 1

வேலுடைக் கருங்கண் மாதர்பொன் புவியா
மேவுமூ வாசையால் மெலிந்து
கோலுடைக் கிழமை யெய்தியுந் திராக்
கொடுவினை யணைவுறா தருள்வாய்.
தோலுடைப் பரமன் வினவவோர் பொருளைச்
சொற்றவா! நற்றவக் குறமின்
மாலுடைக் குமர நாதனே மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 2

தொண்டல தறியாத் தூயமா தவர்தந்
துணையடி பரவிநின் புகழை
விண்டலர் தூவு மெய்த்தவ மடியேன்
மேவுமா றருள்செய விழைவாய்
விண்டலத் தமரர் தண்டலை யிடத்தில்
விரும்பியின் புறும்பல வியனால்
மண்டலம் புகழுந் தண்டமிழ் மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 3

விடக்கொடி யவர்தம் புகழ்சொல் வேன்றன்னை
விறுறச் சிறகடித் தெழுங்குக்
குடக்கொடித் திறமே கூறுகெள மாரர்
குழுவினிற் கூட்டியாண் டருள்வாய்
நடக்கொடிமலைதோ றியற்றிடுங் குமர
நாதனே ! வேதநூ புரத்தாள்
மடக்கொடிச் சிவைதன் பாலனே மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 4

முந்துறும் பிறப்பிற் செய்தநல் வினையின்
முதிர்வினா லிப்பிறப் பிடையே
கொந்துறு மலராற் பூசனை செயவும்
குளிர்துதி செயவும்வாய்த் ததெனா
இந்துறு சடையாற் போற்றுசம் பந்த
ரிசைத்தமாண் பெனக்குற வருள்வாய்
வந்துறு மன்ப ருந்துசேர் மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 5

பழங்கணா யிரத்திற் பட்டுழன் றடியேன்
பாழ்மனம் படுந்துயர் தீர்த்துக்
கிழங்கயின் றிடுமா தவர்க்குமெய் தருநின்
கிளரருட் பேறுறப் புரிவாய்
முழங்கருட் பாட்டாற் காவடி சுமந்துன்
முன்வருவோர்க் கெலா நலமும்
வழங்கருட் பரனே துலங்கெழில் மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 6

காணரு முன்பொற் கழலினை வணங்கக்
கருதிடா தகன்றிடும் பிரமன்
ஆணவ மறிந்து தளையிலிட் டருள்வாய்,
அடியனே னகவிருள் துடைப்பாய்
சேணகத் தமரர் அமுதும்நா ணிடுசீர்ச்
செந்தமிழ்ப் புலவர்கள் புகலும்
மாணரு வளமை நீடுசீர் மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 7

அயிலணி புயமுந் தண்டணி கரமும்
அக்கமும் கோவண வுடையும்
பயிலணி முழுநீற் றுருவமும் காணப்
பழையமா தவந்துணை செயுமோ?
குயிலணிச் சாயற் கோமள வள்ளி
குஞ்சரி யுடன்வரும் உலாவில்
மயிலணிப் புரவிச் சீர்திகழ் மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 8

பழுத்தமா தவர்போற் றருணைமா தவமாம்
பாவலோன், வண்ணவாய் சரபன்
விழுத்தமிழ்ப் பனுவல் வினவுநின் செவிக்கு
விளம்புமென் புன்சொலே றிடுமோ
கொழுத்தலூ னுண்டு குலவிய தகுவர்
குலமறக் களையும்வேற் படையாய்
வழுத்தருட் பெருக்க மலிவுறு மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 9

கொன்றுணா நெறியே மனிதரெல் லோருங்
கொண்டிடச் செயுநலம் வேட்டு
நின்றுன தருளை வேண்டிடு கின்றேன்;
நீயிதை யறிகிலாய் கொல்லோ?
கன்றுமா னேந்திப் புலியுடன் பாம்பும்
கண்டிடக் காளிமுன் அன்று
மன்றுளா டிறைவர் மைந்தனே! மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 10

குலிசமேந் தியகைப் பொன்னகர்க் கிறையும்,
குளிர்மறைப் பிரமனும் மாலும்
நலிவகன் றிடத்தீப் பொறியென வந்தாய்,
நல்லறந் தோய்ந்துதீ தவிரும்
கலியுக மாமிந் நாளில்நீ யருட்சீர் காட்டிட
வேண்டிமிக் கிரந்தேன்
மலியருட் குமர குருபரா மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 11

பொங்குமின் சுவையார் திருப்புகழ் முதலாப்
புகன்றுனைக் காண நாடோறும்
எங்குறு வாரும் வந்துவந் தேத்த
இன்னருள் வழங்கிநீ யிருப்பாய்
கொங்குறும் வெட்சி குராவணி புயத்தாய்
கொங்குநன் னாட்டுனி லென்றும்
மங்குறா வருட்சீர் தங்குயர் மருத
மால்வரைத் தண்டபா ணியனே. 12

———

தனனதனத் தந்த தானத்—தனதானா

கருமவினைத் தொந்த மேவிப்
பலதுயருற் றம்பொ னாவற்
கடலலைப் புண்டு வாடித்—திரியாதே

கடினதவத் தொன்றி ஞானப்
பெருநிலையிற் றங்கு மேன்மைக்
கவினிசைவுற் றின்ப நீடித்—திகழ்வேனோ

பெருகுமெழிற் கண்கொள் தோகைப்
பரிமுதுகுற் றண்டர் மாதைப்
பிரியகுறக் கொம்பினாளைத்—துணையாயே

பிறிதிணையற் றொன்று கோலத்
துடனென் முனுற் றஞ்சலோதிப்
பெரியசுகத் தின்கண் மேவப்—புரிவாயே

குருவெனவுற் றன்று நால்வர்க்
கருள்பரனத் தும்ப ரா! சற்
குண! மலைமுற் றுஞ் செயாடற்—கிசைவேளே!

கொடுமைமிகக் கொண்ட நீசத்
தகுவரையட் டண்டர் பேணக்
குலவயில்வைக் கும்பு யா! மற்—றகரூர்வாய்!

திருவருணைக் கண்கு லாமெய்க்
கிளிவடிவத் துங்க னோதத்
திகழ்கவிசெப் புன்ப ராவற்—கினியோனே!

தெளிதமிழ்நற் றொண்டர் கூடிப்
பணிமருதக் குன்றில் வாழ்சத்
தியவடிவத் தண்டபாணிப்—பெருமாளே.

### ஆக்கியோன்

மருதமலைக் கோயிலிடம் வாழ்தண்ட பாணி
கருதணியார் பாடல் கழறும்—திருவமைந்த
சுந்தரநற் பேர்தோயும் தொண்டனேன் பாடல் கற்போர்
அந்தரத்தோர் சொல்புகழார் வார்.

### வாழ்த்து—வெண்பா

வாழ்க மருத மலைத்தண்ட பாணியன்பர்
வாழ்கதமிழ்ப் பாட்டுரைக்கு மாண்புடையோர்—வாழ்கவே
தொண்டுசெய்வோர், பூசைசெய்வோர், தோயும் அறம் புரிவோர்]
மண்டுமின்பங் கொண்டுமகிழ்ந் து.

———

வித்வான் அருணாசலக்கவிராயர் பாடிய

## 10. அகவற்பா

உயிராதியவருக்க மோனை

அவிர்மணி பலவெடுத் தொளிநிறங் காட்டலின்
ஆய்புலன் றேறும் நாய்க ணாகியும்
இருநிதி மணியுந் தருவும் பொறுத்தலின்
ஈரைஞ் ஞூற்றுப் பார்வைய னாகியும்
உளநிகழ் பவையெலா முதவுத லானும்
ஊழ்முறை தவாத வைத்தரு வெனவும்
எவ்வுயி ருந்தன் னிடம்பெற வியற்றி
ஏனுறக் காட்டலி னெண்கண் ணிறையாய்
ஐயுற மன்னுயி ரடங்கலு நிலைப்ப
ஒழிவறப் புரத்தலிற் கரிய மாலாய்
ஓவுத லின்றி ஒண்டிரை யலைத்து
ஔவையாம் புனறலை யணிதலிற் றிகழ்ந்த
கண்மூன் றுடைய கடவு ளாயும்
காட்சியிற் பொலிந்து மாட்சியி னறவோர்
கிருதுசான் றுயர்ந்த மருதமால் வரையிற்
கீட்டிசை யெழுந்த சேட்டிளம் பரிதிசேர்
குளிர்மதி மூகமு மளிவளர் விழியும்
கூரிய வேற்கை யாறிரு கமலமும்
கெழுதகை வண்டினங் குழீஇய மணந்த
கேழ்கடம் பலங்கற் காடலர் வாகுவுங்
கையுறு புவனம் பனிப்புறக் கூவுங்
கொடிக்காற் படையுங் குலவுற நிவந்த
கோட்டின் மரகதத் தழையிடை விரிக்குபு
கௌவைத் திரைபொரு பௌவத் திடையிற்
சடைவிட் டெழுந்த தணிநிலை மாவின்
சாதக மவித்துச் சேவகம் பெற்ற
சிலம்படி புனைந்து சிலம்பன கொங்கை
சீர்தரு கற்பகக் கொடியொடுங் கூர்த்த
சுடுசரந் தார்க்கு மெயினர்த மில்லிற்

சூழ்தரு வள்ளிக் கொடியு மொருங்கே
செவ்வனிற் படர்ந்த திண்புய வரையுஞ்
சேவைகொண் டிருந்த காவலன் மீது
சைவலஞ் சார்கடற் கைதரு மமுதை
கொற்பெறத் திரட்டி நற்கரை யிட்டெனச்
சோர்வறத் தமிழின் மூவுல கேத்த
சௌரிதன் மருகி பவுரிகொண் டாடத்
தரையிடை பதிக முறைபெற வுஞற்றினன்
தாழ்வறு குணத்தினுந் தக்க கல்வியினும்
திருந்திய பல்லோர் தெற்றினுக் கேநவை
தீர்ந்திவ் வொருவனே உதாரணஞ் சாலுமாய்
துணிவுற வயனார் தொகுக்க வந்தோன்
தூணம் பயந்த மாலோன் மருகனாந்
தெய்வத வழியி னுய்தர வந்தோன்
தேவர்கட் காக்க மேவரக் குறித்து
தைத்திய குலத்துத் தகர்வலி யொறுத்த
தொல்லோ னெனத்தமிழ்ச் சூழ்ச்சியில் வல்லான்
தோகையர் விழியிற் குவளையு முறுவலில்
தௌதிக நிரையுந் தனிவா யதனினும்
நகைமிகு மாம்ப னறுமலர்த் தொகையும்
நார்தரு குழனி விடுசை வலமும்
நிழன்முக மென்ன விகசித முளரியும்
நீளிய செவியி னேரிய வள்ளையும்
நுண்ணிய விதழி னண்ணிய துகிரும்
நூங்குறு கணைக்கா னேர்படு வராலும்
நெறிதொறு நெறிதொறு மலருற விலங்கும்
நேமிகொண் டிரைநீர்க்கயத்தடர் பகட்டினம்
நைவறப் படிதலி னுள்வெரீஇக் கிளர்ந்து
நொறிச்சினை நிறைந்த வுறுப்படு சுறவம்
நோன்றாட் பூசங் குலையறப் பாய்ந்து
நௌவுறுங் கழனிச் செய்வரம் புடுத்து
படிமிசை திலகமாம் வடநெறி யதனிற்
பார்செயுந் தவத்தாற் றோன்றிய சுகுணன்
பிழையறு நாவலர் செவியிடைபொழிய

பீடுசா னிறைதமிழ் வாரிதி முகக்கும்
புயல்வட மொழியினும் பூரண பாண்டிதன்
பூரண னாரணன் பூமகன் காணாப்
பெம்மா னனன்மழுக் கைமான் றரித்து
பேயோ டாடும் பிஞ்ஞகன் வெங்கட்
பையர வணிந்த வையன் புகலிற்
பொய்படு நுண்ணிடைத் தையலோர் பங்கன்
போதக முரித்த வேதகந் தரித்த
பௌதிகன் முக்கட் பரமன் சடைமேன்
மதிபுனை பெம்மான் வரதன் முன்னா
மாலறக் குடிலையின் சிலமி தாமென
மிசைப்பொரு ளுணர்த்தி இசைப்படு செவ்வேண்
மீதன் பிவ்வா றெனமன் பதைகண்
முற்றிலு மாண்பு முளைத்திட வந்த
மூதறி வாளன் முத்தமிழ் கற்று
மெய்ம்மைசே ரிதய வித்தக சுத்த
மேதகை பூண்ட மாதவ னன்றி
மையினுங் குருகினுங் கைமலை மருப்பினும்
மொய்தரு வரியினுஞ் செய்படு கதலியின்
மோடுறு கேழற் கோட்டிற் கராவின்
மௌலிகான் முளரியி னாவி னெயிற்றினும்
வளையின மீனிற் கழையிற் கமுகின்
வாலிய சங்கின் மடவார் களத்தின்
விடமிகு மரவிற் றடமதி யிடத்தின்
வீரையின் மற்றைப் பொருளினும் பிறவா
வுணர்வுடை ஞான மூர்த்திதன் வயிற்றினிவ்
வூதிய மாகிய வுதித்ததோர் முத்தென
வெட்டிசை புகழுங் கெட்டி முத்தென்ன
வேயிசை கொண்டோ னாயிர நாவினும்
வைத்துரை கூறினு மித்தகை யாமென
வொப்பனை முற்றுமோ கற்பனை கடந்துநா
வோதிய வறிஞ ரிதிசே ரிருமையும்
வௌவிய கீர்த்திச் செவ்விநர வலனே.

———